4 பக்கங்கள் 25 காசுகள்

பதிவு எண் எம்: 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 மதுரை 16—12—75 செவ்வாய் மலர் 265

## காட்டுமிராண்டி சிலி அரசுக்கு ஐ. நா. கண்டனம்

ஐ நா சபை, டிச. 13—

சித்திரவதை செய்வதையே ஒரு திட்டமாகக் கொண்டு சிலி நாட்டு சர்க்கார் தனது அரசியல் எதிரிகளை வஞ்சம தீர்த்து வருவதாகவும்—இது ஐ நா சாசனத்தில் கண்டுள்ள மனித உரிமைகளை மீறுவதாகுமென்றும் குறிப்பிட்டு சிலி அரசுக்கு கடும் கண்டனத்தைத் தெரிவித்து ஐ நா சபையின் பொதுச்சபை தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

## மூன்றுக்குமேல் இருந்தால் பிரசவ லீவு இல்லையாம்

சண்டிகார், டிச. 13—

மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட குழந்தைகள் உள்ள பெண் ஊழியர்களுக்கு தாய்மை கால (பிரசவ) விடுமுறைச் சலுகையை இந்திராகாங்கிரஸ் கோலோச்சிவரும் பஞ்சாப்அரசு ரத்துச்செய்துவிட்டது அதேபோல் 3 குழந்தைகளுக்கு மேல் உள்ள ஊழியர்களுக்கு கார், ஸ்கூட்டர், வீடு முதலியன வாங்குவதற்கு கடன் வழங்குவது போன்ற சலுகைகளையும் ரத்துச்செய்ய இந்த அரசு யோசித்துவருகிறதாம்.

இரண்டு குழந்தைகளுக்கு மேல் பெற்றால் வரி போடுவது குறித்து அரியாணு மாநில இந்திராகாங்கிரஸ் அரசு ஏற்கனவே யோசித்து வருவது தெரிந்ததே

# போனஸ் குறைப்பு அவசரச் சட்டத்தை வாபஸ் பெறச் செய்ய

# நாடுதழுவிய வலிமைமிக்க—ஒன்றுபட்ட இயக்கம்

### சிஐடியூ, யூடியூசி, எச்எம்எஸ், எச்எம்பி, டியூசிசி, பிஎம்எஸ், தொமுச, தநாதொசகா—ஆகிய 8 தொழிற்சங்கங்கள்

# கூட்டாக விடுக்கும் அறைகூவல்

கல்கத்தா, டிச- 13—

**போனஸ் அவசரச் சட்டத்தை வாபஸ் பெற வேண்டுமென வற்புறுத்தி சக்தி வாய்ந்ததொரு இயக்கத்தை நடத்துவதற்கு அனைத்து தொழிற்சங்க அமைப்புகளும் கூட்டாக ஓர் வேண்டுகோள் விடுத்துள்ளன.**

அந்த வேண்டுகோளில் இந்திய தொழிற்சங்க மையத்தின் (சி ஐ டி யூ) பொதுச் செயலாளர் பி ராமமூர்த்தி, ஐக்கிய தொழிற் சங்க காங்கிரசின் [யூ டி யூ சி] பொதுச் செயலாளர் ஜதீன்சக்கரவர்த்தி, ஹிந்துமஸ்தூர் சபாவின் [எச் எம் எஸ்] கூட்டுச் செயலாளர் வசந்தகுப்தா, ஹிந்து மஸ்தூர் பஞ்சாயத்தின் (எச் எம் பி) கூட்டுச் செயலாளர் வெங்கட்ராமன் பாரதீய மஸ்தூர் சபாவின்(பி எம் எஸ்] அமைப்புச் செயலாளர் ஜி பிரபாகர், டி யூ சி சி தலைவர் கணை பட்டாச்சாரியா) தொழிலாளர் முன்னேற்றப் பேரவையின் (தொ மு ச) பொதுச் செயலாளர் காட்டூர் கோபால், தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் (டிஎன்டியூசி) ஆர். செங்காளியப்பன் மற்றும் பாகராம் துல்புலே ஆகியோர் கையெழுத்திட்டு கூட்டாக அறைகூவல் விடுத்திருக்கிறார்கள்.

### தொழிலாளர்களுக்கு வேண்டுகோன்

"அன்பார்ந்த தோழர்களே!

அண்மையில் இந்திய ஜனாதிபதியால் பிறப்பிக்கப்பட்ட போனஸ் அவசர சட்டமானது, தொழிலாளர்களின் போனஸ் உரிமை மீது நேரடியாகத் தொடுக்கப்பட்ட தாக்குதலாகும் என்பதை நீங்களனைவரும் இப்பொழுது உணர்ந்திருக்கிறீர்கள். கடந்த 35 ஆண்டுகளாக தொழிலாளர்கள் கடுமையான போராட்டம் நடத்தி பெற்ற உரிமைகள் அனைத்தையும் இந்தச் சட்டம்பறித்துவிட்டிருக்கிறது. ஆண்டுதோறும் ரூ 200 கோடி அளவுக்கு முதலாளிகள் வாரிக் கொள்ள வழி செய்யப்பட்டிருக்கிறது.

### போனஸ் தத்துவத்தை புதைகுழியில் தள்ளினர்.

இந்த அவசரச்சட்டமானது, குறைந்தபட்ச போனஸ் 8.33 சதமானம் என்று இருந்ததை, 4 சதமானமாக வெட்டிவிட்டதுடன், "போனஸ் என்பது கொடுபடாத சம்பளம்" என்று சுப்ரீம்கோர்ட்டே வெளியிட்ட கருத்தையும் ஒரேயடியாக அடித்து விட்டது.

தொழிலாளர்களே, இதுவரையில், கம்பெனிக்கு லாபமானாலும் நட்டமானாலும், அதுபற்றிகவலையில்லாமல்,குறைந்தபட்ச போனசை உங்களுடைய உரிமை என்ற முறையில் இதுவரையில் பெற்றுவந்தீர்கள்.

ஆனால் இந்த அவசரச்சட்டமானது இந்தக் கருத்தை மறுத்துவிட்டதின்மூலம் கம்பெனிக்கு நட்டம் ஏற்பட்டிருப்பதால் போனஸ் கொடுப்பதற்கில்லை என்றுகூறி உங்களுடைய போனஸ் உரிமையைப் பறித்துள்ளது.

### போனசை மறுக்க வேலைப்பளுவை திணிக்க

அவசர சட்டத்தில் ஒரு புதிய ஷரத்தையும் புகுத்தியிருக்கிறார்கள். அதாவது, குறைந்தபட்ச போனசை அவர்கள் கணக்கு போடுகின்ற போது, 4 ஆண்டு காலத்திய சராசரி லாபத்தை அடிப்படையாகக் கொண்டுகணக்குபோடுகிறார்கள். அப்படிப் பார்த்தால், பெரும்பாலான கம்பெனிகள் லாபமே இல்லை என் கணக்குக் காட்டி போனஸ் கொடுப்பதற்கில்லை என்று கையை விரித்துவிடும்.

இந்த போனஸ் அவசரச் சட்டமானது இன்னொரு விஷம வேலையையும் செய்திருக்கிறது அதாவதுஇது போனசை உற்பத்தி திறனோடு இணைக்கிறது. இதன் அருத்தம் என்னவென்றால், ஏற்கனவே அதிக லாபம் பெற்றுவரும் கம்பெனிகளுக்கு, மேலும் லாபத்தை நீங்கள் தேடி கொடுத்தாலொழிய, உங்களுக்கு கூடு[illegible] போனஸ் கிடைக்காது என்ப[illegible]

[illegible]ங்கத்தின் இந்தப் போக்கை, [illegible]க இயக்கம் முழுவதுமே எதிர்த்து வருகிறது. ஆனால் இந்த ஆட்சேபணைகளை அரசாங்கம் கிஞ்சித்தும் மதிக்கவில்லை.

அரசாங்கத்தின் இந்தப் புதிய நடவடிக்கையானது தொழிலாளர்கள்மீது வேலைப்பளுவைஅதிகரிக்கவும்சுரண்டலைதீவிரப் படுத்தவும் முதலாளிகளுக்கு சரியான பிடிகொடுத்திருக்கிறது.

### தடுக்கவும் செய்கிறது

இந்த அவசரச்சட்டத்தின் நச்சுக் கொடுக்கு, மேலும் கொட்டுகிறது, அதாவது, வங்கிகளிலும் ஆயுள்காப்பீட்டுக்கழகங்களிலும் துறைமுகங்களிலும் மற்றுமுள்ள பணிமனைகளிலும் வேலைசெய்யும் ஊழியர்களுக்கு கம்பெனிகள் இஷ்டபூர்வமாகக் கொடுக்கும் போனஸ்கூட உச்சபட்சம் 10 சதமானத்துக்கு மேல் கொடுக்கக்கூடாது என்று இந்த அவசரச் சட்டம்வேலிபோட்டிருக்கிறது. இந்த ஊழியர்களுக்கும் இன்றைய போனஸ் உரிமையை வெட்டியுள்ளது.

### பொதுத் துறையில் கூட்டு பேரம் இல்லை

பொதுத்துறை தொழில்களின் நிர்வாகங்களுக்கு மத்திய அரசாங்கம் விடுத்துள்ள தாக்கீதில் "இந்த நிர்வாகங்கள் தொழிற் சங்கங்களுடன் போனஸ் பற்றி பேச்சு வார்த்தை நடத்தக் கூடாது என்று கூறுகிறது. இதன் மூலம் பொதுத்துறை தொழில்களின் ஊழியர்களுக்கு எவ்வளவு போனஸ் கொடுப்பது என்பதை தீர்மானிக்கும் உரிமை நிர்வாகங்களுக்கே விடப்படுகிறது. இதன்மூலம் கூட்டுப் பேரம் பற்றிய சகல கோட்பாடுகளையும் காற்றிலே பறக்க விடுகிறார்கள்.

### கோட்பாடுகள் காற்றிலே

இவ்வாறு இந்தஅவசர சட்டத்தின் மூலம்சகல கோட்பாடுகளையும் காற்றிலே பறக்க விட்டுவிட்டார்கள்.

### ஊதிய வெட்டு

இவ்வாறு ஒரேயடியில் 8.33 சதமான ஊதிய வெட்டை அனைத்து தொழிலாளி வர்க்கத்தின் மீதும் ஏற்படுத்தி விட்டார்கள்.

பண வீக்கத்தைத் தடுப்பதற்காகவே இந்த நடவடிக்கை அவசியமாயிற்று என்று அரசாங்கம் கதையடித்தாலும், அத்தனையும் ஏமாற்று பேச்சு என்று கூறிக் கொள்ளுவதோடு மேற்கொண்டும் விவரிக்கவேண்டாமென்று விட்டு விடுகிறோம்.

### குறைந்த போனஸ்

தொழிலாளத் தோழர்களே, உங்கள் அனைவருக்கும் ஒன்று தெரியும். இந்த அவசர சட்டத்தை கம்பெனிகள் அனுகூலமாகப் பயன்படுத்திக்கொண்டு, தொழிலாளர்களுக்கு முன்னைய ஆண்டுகளில் கொடுத்து வந்த போனசைவிட குறைவாகவே போனஸ் கொடுக்க துணிச்சல் கொண்டனர்.

### எதிர்த்து எழுக!

தொழிலாளத் தோழர்களே!

போனஸ்பெற உங்களுக்குள்ள உரிமை மீது ஏற்பட்டுள்ள இந்ததாக்குதலை சாத்தியப்பட்டசகலவழிகளையும் கடைப்பிடித்து எதிர்த்து நிற்குமாறு உங்களை கேட்டுக் கொள்கிறோம்.

இந்த அவசரச் சட்டத்தை வாபஸ் பெறுமாறு அரசாங்கத்தை நிர்ப்பந்திக்க வலிமைமிக்க ஓர் ஒன்றுபட்ட இயக்கத்தைக்கட்டி வளர்க்குமாறு கேட்டுக் கொள்கிறோம்" என அக்கூட்டறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்கள்.




நன்றி: "இந்தியன் எக்ஸ்பிரஸ்"

ஆப்பிரிக்கப் பயணத்திலிருந்த ஜனாதிபதிக்கு புதிய அவசரச் சட்டங்கள் விமானம் மூலம் கையெழுத்துக்கு அனுப்பப்பட்டனவாம். —செய்தி



## ★ 500 குடும்பங்களுக்கு ஒருநியாய விலைக்கடை திறத்தல்
## ★ 'சமவேலைக்கு சமஊதிய சட்டம்' கறாராக அமுலாக்குதல்

## ஆகிய கோரிக்கைகளை வற்புறுத்தும்

# 65,508 கையெழுத்து மகஜர்கள்

## மாதர் சங்கத் தலைவர்கள் முதலமைச்சரிடம் அளித்தனர்

சென்னை, டிச.13—

தமிழகம் முழுவதும் 500 குடும்பங்களுக்கு ஒரு நியாயவிலைக் கடை, 'சம வேலைக்கு சம ஊதியம்' சட்டத்தை கறாராக அமுலாக்குதல்—ஆகிய கோரிக்கைகளை வற்புறுத்தி 65 ஆயிரத்து 508 பெண்களின் கையெழுத்துக்கள் அடங்கிய கோரிக்கை மகஜர்களை கடந்த 10ந்தேதி மாலையில் தமிழக ஜனநாயக மாதர் சங்க தலைவர்கள் கோட்டைக்குச் சென்று முதலமைச்சர் திரு கருணாநிதியிடம் அளித்தார்கள்.

கடந்தஇருமாதகாலமாக பிரதமர் இந்திராவுக்கும், முதலமைச்சர் கருணாநிதிக்கும் சமர்ப்பிக்க வேண்டி —மாதர் சங்கத்தின் முன்னணி ஊழியர்கள் மாநிலம் தழுவிய இயக்கமாக நடத்தி கையெழுத்துக்கள் பெற்ற மகஜர்களை —மாதர் சங்கத்தின் தலைவர் கே பி ஜானகியம்மாள், செயலாளர் பாப்பா உமாநாத், துணைத் தலைவர்கள் ஷாஜாதி கோவிந்தராஜன், மைதிலி சிவராமன் மற்றும் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த கஸ்தூரி, பாக்கியம், சென்னையைச் சார்ந்த விஜயா ஜானகிராமன், ருக்மணிஅம்மாள், கோவிந்தம்மாள் ஆகிய தோழர்கள் முதலமைச்சரிடம் சமர்ப்பித்து முக்கிய கோரிக்கைகளை வற்புறுத்தினர்.

அப்போது அமைச்சர்கள் எஸ். மாதவன், ப. உ. சண்முகம், எஸ். ஜெ. சாதிக் பாட்சா, ஓ. பி. ராமன் ஆகியோரும் உடனிருந்தனர்.

மாநிலத்தின் எல்லா மாவட்டங்களிலும் உபரி தான்யம் முழுவதையும் கொள்முதல் செய்ய வேண்டிய அவசியத்தையும் கிராமப்புறங்களிலும், நகர்ப்புறங்களிலும் உள்ள மக்களுக்கு — 500 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலை கடைவீதம்திறந்து,லாபநஷ்டம் பாராமல் — உணவுப் பொருட்களை அரசே விநியோகிக்க வேண்டிய அவசியத்தையும் விளக்கினர்.

### மெத்தனமாக இருப்பது கூடாது

இன்று அரிசிவிலை சற்று இறங்குமுகமாக இருப்பது கண்டு மெத்தனமாக இருப்பது கூடாது என்றும்,அரிசி போன்ற உணவுப் பொருட்களுடன் மிளகாய், எண்ணெய் போன்ற தேவைப் பொருட்களையும் அரசே விநியோகிக்க வேண்டும்என்றும் கோரினர்.

உபரி தானியங்களை நிலஉடைமையாளர்களிடம் விட்டு வைத்திருக்கும்வரை- பெரும்வியாபாரிகளின்கைகளில் வியாபாரப் பிடிப்பு உள்ளவரை- விலைவாசியைக் கட்டுப்படுத்த முடியாது என்பதைச் சுட்டிக்காட்டினர்.

### சமஊதிய சட்டத்தை பிற துறைகளிலும் அமுலாக்கு

'சம வேலைக்கு சமஊதியம்' சட்டத்தை தமிழகத்தில் தொழிற் துறையில் மட்டுமின்றி பிற துறைகளிலும்—குறிப்பாகவிவசாயத் துறையில்—கறாராக அமுலாக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

மகஜர்களைப் பெற்றுக் கொண்ட முதலமைச்சர், கோரிக்கைகள் குறித்து ஆவனசெய்வதாக கூறினார்.

### பிரதமர் இந்திராவுக்கு அனுப்பப் படுகிறது

இதே போன்று 65ஆயிரத்து 508 பெண்களது கையெழுத்துக்கள் அடங்கிய கோரிக்கை மகஜர்கள் பாரதப் பிரதமர் திருமதி இந்திராகாந்திக்கு புது டெல்லிக்கு நேரடியாக அனுப்பப்படவிருக்கின்றன.

## போனஸ் வெட்டை எதிர்த்து உயர்நீதி மன்றத்தில் 'ரிட்"

சென்னை, டிச. 13—

கனரா பேங்க் ஊழியர் சங்கமும் கனரா பேங்க் நிர்வாகமும் கலந்து பேசி, 1974-ம் வருடத்துக்கு ஊழியர்களுக்கு 11.1 சதமான போனஸ் வழங்குவது என்று ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது,

இந்த ஒப்பந்தமானது, போனஸ் அவசரச் சட்டம் பிறப்பித்த தேதிக்கு [1975 செப்டம்பர் 25) முன்னதாக செய்து கொள்ளப் பட்ட ஒப்பந்தமாகும்.

இப்படி 11.1 சதமான போனஸ் கொடுக்க கூடாது என்றும், புதிய அவசரச் சட்டப்படிகம்பெனிகள் இனமாகக் கொடுக்கும் உயர்ந்தபட்ச போனஸ் தொகையானது 10 சதமானத்துக்கும மேல் இருக்கக் கூடாது என்றும் இந்திய சர்க்காரும் இந்திய சர்வ பேங்கும் கட்டளையிட்டது.

இவ்வாறு, ஈவது விலக்கேல் என்ற சொல்லையும் மீறி—கொடுப்பாரை கொடுப்பதை, கெடுப்பார் கெடுப்பது போல, மத்திய அரசும ரிசர்வ் பேங்கும தலையிடுவதற்கு அதிகாரமில்லை என்று கூறி எதிர்ப்புத தெரிவித்து கனரா பாங்க் ஊழியர்கள் சங்கம், சென்னை உயர்நீதி மன்றத்தில் ரிட் மனு தாக்கல் செய்தது.

நேற்று நீதிபதி ஜஸ்டிஸ் ஜி இராமானுஜம ரிட் மனுவை ஏற்றுக் கொண்டு தீர்ப்புக்கூறினர்.

சங்கத்தின் சார்பில் திரு, பி, ஆர். டூலியா வாதாடினர். அவர், "இந்தகைய உடன்படிக்கைகளை, அவசர சட்டத்தில் செய்யப்பட்ட ஒரு திருத்தத்தின் மூலமாக செல்லுபடி ஆக்கப்பட்டிருக்கிறது. போனஸ் பட்டுவாடா சட்டத்தின்31.ஏ செக்ஷனில் உள்ள இந்தத்திருத்தமானது ஒப்பந்தத்தைபபாதுகாத்திருக்கிறது" என்றார்

மேலும் அவர் கூறுகையில், "1974-ம வருடத்துக்கு போனஸ்பெறுவதற்கு,திருத்தம செய்யப்படாத போனஸ் சட்டத்தின்படி ஊழியர்களுக்கு உரிமை இருக்கிறது. அதற்குப்பிறகு செய்யப்பட்ட திருத்தமானது, அந்த உரிமையைப் பறிக்க முடியாது. அந்தச்சட்டத்திலிருந்து பேங்கு ஊழியர்களை விலக்கிவிடவும முடியாது"

திரு. டூலியா மேலும் வாதாடுகையில்,

"ஒவ்வொரு கம்பெனியின் நிதி நிலைமையையும் இதர சூழ்நிலைகளையும கருத்தில் கொண்டு, இனமாக வழங்கப்படும போனஸ் தொகையானது கூடுதல் பட்சம 10 சதமானத்திற்குமேல் போகக்கூடாது என்று மத்திய அரசு விதித்த கட்டளையானது. ஊழியர்களைக் கட்டுப்படுத்தாது, காரணம், பேங்குகள் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல 1974-க்கு போனஸ் வழங்கக்கூடாது என்று அரசு கட்டளைப் பிறப்பதற்கு முன்னால். அந்த அரசானது,பேங்கு ஊழியர்களின் கருத்தைக் கேட்டறியவில்லை. குறிப்பாக' கனரா பேங்க் நிருவாகம் 11.1 சத போனஸ் கொடுக்க ஒப்புக் கொண்டிருக்கின்ற போது. அது பற்றி ஊழியர்களின் கருத்தை அரசு கேட்டறிய வில்லை" என்றார்.

இது சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு கோர்ட்டார் வழிகாட்டல் உத்தரவு அனுப்ப வேண்டுமென்றும் திரு டூலியா கோர்ட்டாரை வேண்டிக்கொண்டார்.

நீதிபதியும அவ்வாறே உத்தரவு பிறப்பித்தார்.

### நன்றி அறிவிப்பு

ஜனநாயகமாதர் சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க நடந்த இந்த கையெழுத்து இயக்கத்தில அயராது உழைத்த மாதர்சங்க ஊழியர்களுக்கும உதவிகள் புரிந்தசகோதர அமைப்புக்களுக்கும கையெழுத்திட்ட அனைத்துச் சகோதரிகளுக்கும் மாதர் சங்கத்தலைவர்தோழர்கே பி ஜானகியம்மாளும் செயலாளர் தோழர் பாப்பா உமாநாத்தும் நன்றி தெரிவித்துள்ளனர்.

### "செம்மலர்" அறிவிப்பு

இம்மாத செம்மலர் சில தவிர்க்க முடியாத காரணங்களால் ரயில பார்சல மூலம பெறும் ஏஜெண்டுகளுக்கு காலதாமதமாகஅனுப்பப்பட்டுள்ளது என்பதை வாசகர்களுக்கு தெரியபபடுத்திக் கொள்கிறோம்,தாமதத்திற்கு வருந்துகிறோம்.

நிர்வாகி
செம்மலர்
மதுரை—18.

# தீக்கதிர்

## இந்தோனேஷிய ஆக்கிரமிப்புக்கு இந்தியா ஆதரவா?

கிழக்கு திமோரில் 450 வருட போர்ச்சுகீசிய காலனி ஆட்சி அகன்றது. அங்கிருந்த அரசியல் கட்சிகளில் இடதுசாரி கட்சி என வர்ணிக்கப்பட்டு வரும் "ப்ரெட்லின்" கட்சி சுதந்திர கிழக்கு திமோரின் கொடியை தலைநகரான டிலியில் ஏற்றி, ஒருபுதிய சுதந்திர அரசாங்க அமைப்பையும் அறிவித்து ஆட்சியை மேற்கொண்டது, புதிய அரசாங்கத்திற்கு மக்களின் ஆதரவுதிரளலாயிற்று.

நாட்டிலிருந்த இதர இரு முக்கிய அரசியல் கட்சிகள் "அபோடெட்டி", "யு டி டி" என்ற கட்சிகளாகும், அவை மிதவாத போக்குடைய கட்சிகளும் கூட. அவை செல்வாக்கிழக்க ஆரம்பித்தன, எனவே அவற்றின் தலைவர்கள் அண்டை நாடான இந்தோனேஷியாவுக்கு ஓடினர். ஏற்கெனவே கிழக்கு திமோர் மீது கண்வைத்திருந்த இந்தோனேஷியா, இதை ஓர் வாய்ப்பாக பயன்படுத்திக் கொண்டு கிழக்கு திமோர் மீது படையெடுத்துள்ளது. டிலி நகரிலும் இதர இடங்களிலும் போர்க் கப்பல்களையும் பட்டாளங்களையும் அனுப்பி புதிய சுதந்திரகிழக்குத்திமோர் அரசைத் தாக்குகிறது. நீண்டநாட்களாக திமோர் விஷயத்தில் தான் தலையிடப் போவதில்லை என்று பறைசாற்றி வந்த இந்தோனேஷிய அரசாங்கம் அதையெல்லாம் காற்றில் பறக்கவிட்டு கிழக்கு திமோரில் ஆக்கிரமிப்பில் இறங்கியிருக்கிறது. சுமார் 6 லட்சம் மக்களை மட்டும் ஜனத்தொகையாகக் கொண்ட சின்னஞ்சிறு திமோர் நாட்டின் மீது இந்தோனேசியா தனது முழு படைபலத்துடன் போர்தொடுத்திருக்கிறது. புதிய ப்ரெட்லின அரசாங்கம் உலக மக்களுக்கு இந்த அநீதியை அறிவித்து உதவிகோரியிருக்கிறது. போர்ச்சுகல் அரசாங்கமும் ஐக்கிய நாட்டுசபையின பந்தோபஸ்து கவுன்சிலில் இந்தோனேசியாவின் ஆக்கிரமிப்பைக் கண்டித்து அதைத்தடுத்து நிறுத்துமாறு கோரியிருக்கிறது.

இந்தோனேசிய அரசு இதையெல்லாம் பற்றிக் கவலைப்படவில்லை. எப்படி 10 வருடங்களுக்கு முன்பு ஈவிரக்கமின்றி 5 லட்சத்திற்கு மேற்பட்ட கம்யூனிஸ்டுகளையும கம்யூனிஸ்டு ஆதரவாளர்களையும் கொன்றுகுவித்துக் கம்யூனிஸ்டுகளைப் பூண்டோடு ஒழித்து விட்டேன் என்று கொக்கரித்ததோ அதே மாதிரி ப்ரெட்லின் அரசாங்கத்தினரை அடியோடு ஒழித்துக்கட்டி கிழக்குத் திமோரைத்தனவசமாக்கிக்கொள்ளும வரை அதன் ரத்தவெறி நிற்காது.

நேற்று ஐ நா சபையின் "அறக்கட்டளை (ட்ரஸ்டிஷிப்) குழு" இந்தப்பிரச்சினையை அவசரமாக விவாதித்து "கிழக்கு திமோரில் இந்தோனேசியாவின் ராணுவ தலையீட்டிற்கு" வருந்தியும், 'காலங்கடத்தாமல் தனது படைகளை அங்கிருந்து வாபஸ் பெற்றுக்கொள்ளும்படியும்" ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி அனுப்பியுள்ளது.

இந்தத் தீர்மானத்தை ஆதரித்து 69 வோட்டுகளும் எதிர்த்து 11 வோட்டுகளும் பதிவாகியிருக்கின்றன. 38 பேர் வோட்டெடுப்பில் பங்கெடுக்கவில்லை.

தீர்மானத்தை எதிர்த்த நாடுகளில் இந்தியாவும் ஒன்று என்பது வேதனைக்குரிய விஷயம். இரான், மலேசியா, ஸௌதி அரேபியா, பிலிப்பைன்ஸ் போன்ற நாடுகளுடன் இந்தியாவும் இந்தோனேசியாவின் ஆக்கிரமிப்பை கண்டித்து வோட்டுப் போட மறுத்திருக்கிறது.

இந்தோனேசியாவைக் கண்டித்த ஐ நா சபையின் கமிட்டியின தீர்மானத்தை ஆதரித்தவர்களில் பாகிஸ்தான், பங்களாதேஷ், பூட்டான், நேபாளம், இலங்கை, சீனக் குடியரசு சில ஆபரிக்க நாடுகள் கிழக்கு ஐரோப்பிய கம்யூனிஸ்டு நாடுகள் முதலியன உள.

இந்தியாவும், இந்தியாவுடன் நின்ற நாடுகளும் ஒரு மாற்று தீர்மானம் கொண்டுவர நினைத்தார்களாம். அதாவது ஐ நா சபை ஒரு பரிசீலக்குழு அனுப்பி விவரம் அறிந்து வர விரும்பினர்களாம். இந்தோனேசியாவை கண்டிப்பது அவசரப்பட்டுச் செய்யும் நடவடிக்கையாகும் என்று இந்தியப் பிரதிநிதி விளக்கம் கூறியிருக்கிருர். இந்த தீர்மானம் தோல்வியுறுமென்று உணர்ந்து சபையின் முன வைக்கப்படாமல் வாபஸ் பெற்றுக் கொள்ளப்பட்டதாம்.

உலக சமாதான கவுனசில் மாஸ்கோவிலிருந்து இந்தோனேசிய ஆக்கிரமிப்பை வனமையாகக்கண்டித்திருக்கிறது. நடுநிலை நாடுகளில் இந்தியாவுக்கு நெருக்கமாக உள்ளதாகக் கூறப்படும் யுகோஸ்லேவியாவும் இந்தோனேசிய நடவடிக்கைக்கு கண்டனம தெரிவித்திருக்கிறது.

புதிதாக சுதந்திரமடைந்துள்ள ஒரு சிறிய நாட்டை காட்டுமிராண்டித்தனமாக இந்தோனேஷியப் படைகள் தாக்கி வருவது உலகறிந்த கொடுமையாகக் காட்சியளிக்கும்போது அதை ஐ நா சபையில் கண்டிக்க இந்தியா முன வராதது மட்டுமல்ல, அதற்கு ஆதரவு தரும் வகையிலே நடந்து கொண்டதைஎந்தவிதத்திலும் நியாயப் படுத்த முடியாது. கிழக்கு திமோர் பிரச்சினையில் இந்தியா ஐ நா சபை கமிட்டியின கண்டனத் தீர்மானத்தைஎதிர்த்து வாக்களித்ததை உலகெங்குமுள்ள முற்போக்கு சக்திகள் கண்டிப்பார்கள்.

---

## பரோடா, சூரத் மேயர் தேர்தல்
### ஸ்தாபன காங்கிரசார் ஏகமனதாக தேர்வு

பரோடா, டிச 13— குஜராத் மாநிலத்தில் அண்மையில்தேர்தல் நடந்த மாநகராட்சிகளின் மேயர், உதவி மேயர்களாக ஜனதா முன்னணி வேட்பாளர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

60 உறுப்பினர்கள் கொண்ட பரோடா மாநகராட்சியின மேயராக ரமன் பாய் ஹரிபோகி பட்டேலும், 65 உறுப்பினர்கள்கொண்ட சூரத் மாநகராட்சியின் மேயராக டாக்டர் நவின் சந்திர பாரதியாவும்தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

இவ்விருவரும் ஸ்தாபன காங்கிரசை சேர்ந்தவர்கள். ஜனசங்கத்தைச் சேர்ந்த பிரதாப்ராபராவ் சந்தாணியும டாக்டர் கே கே தேசாயு, முறையே சூரத், பரோடா மாநகராட்சிகளின் உதவி மேயர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### இந்திரா காங்கிரஸ் ஒதுங்கியது

இம்மாநகராட்சிகளுக்கு நடந்த தேர்தல்களில் மூன்றில் ஒரு பங்கு இடத்தைக் கூட பெற முடியாத இந்திரா காங்கிரஸ் மேயர், உதவி மேயர் தேர்தல்களில் போட்டியிடாது ஒதுங்கி விட்டது.

---

## வேலியே பயிரை மேய்ந்தது கதை

தூத்துக்குடி, டிச. 13— தூத்துக்குடி சப்ஜெயிலில் கைதியாக அடைக்கப்பட்டிருந்த ஒரு பெண்ணிடம் தகாத முறையில் நடந்து கொண்டாராம்ஒரு போலீஸ் ஏட்டு. மத்திய சரகத்தைச் சேர்ந்த மரிய வெள்ளைப் பாண்டி எனப்படும் அந்த ஏட்டு சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளார். அதற்கான உத்தரவை மாவட்ட போலீஸ் அதிகாரி பிறப்பித்தார்.

பேச்சியம்மாள் என்ற பெண் மதுவிலக்கு வழக்கு ஒன்றில் சம்பந்தப்படுத்தப்பட்டு விசாரணைக் கைதியாக ஜெயிலில் அடைக்கப்பட்டிருந்தாராம். அங்கு இரவில் ஜெயில் வார்டன் தூங்கிக் கொண்டிருந்தபோது அவரிடம் இருந்த சாவியை மேற்படி ஏட்டு எடுத்து ஜெயில் கதவைத் திறந்து, பேச்சியம்மாளிடம் தவருன முறையில் நடந்து கொண்டதாகக் கூறப்படுகிறது.

தூங்கிக் கொண்டிருந்ததாகக் கூறப்படும் ஐசக் டென்சன் என்ற வார்டனையும் தற்காலிக வேலைநீக்கம் செய்து உதவி கலெக்டர் உத்தரவு பிறப்பித்தார்.

---

### மின் தொழிலாளர்கள் சம்பள உயர்வு தரகோரிக்கை

சிவகிரி, டிச, 12— கடந்த 8ந் தேதி சிவகிரியிலும் 9ந் தேதி வாசுதேவநல்லூரிலும் மின் தொழிலாளர் சங்க (சிஐடியூ) கூட்டங்கள் நடந்தன. சம்மேளனம் முன்னேற்றச் சங்கங்கள் ஆகியவற்றைச் சேர்ந்த சிலரும் கலந்து கொண்டனர்.

இக்கூட்டத்தில் பேசிய தலைவர்கள், சம்பள விகிதங்களை உயர்த்தக் கோரியும், இப்பிரச்னையில் மத்திய—மாநில அரசுகளின் கடமை பற்றியும், தொழிலாளர்களின் ஒன்றுபட்ட நடவடிக்கை பற்றியும்பேசினர்.

---

### செங்கடலும் அமைதி மண்டலம்: இந்தியா-சூடான் கூட்டறிக்கை

கார்ட்டோம், டிச. 12— வல்லரசுகளின் போட்டா போட்டிகளும், பதட்டநிலையும் இல்லாத—அந்நிய இராணுவ தளங்கள் அமையாத அமைதி மண்டலமாக இந்துமாக் கடலும் செங்கடலும் இருக்கவேண்டுமென்று இந்தியாவும் சூடானும் கூட்டறிக்கை ஒன்றில் கூறியுள்ளன.

இந்திய ஜனதிபதி பக்ருதீன் அலி அகமதுவின் நான்கு நாள் சூடான் சுற்றுப்பயணத்தின இறுதி நாளான 10ந்தேதி இந்தக் கூட்டறிக்கையை பக்ருதீனும், சூடான் ஜனதிபதி நிமேரியும் விடுத்தனர்.

---

### பள்ளி, சுகாதார வசதி மாநகராட்சி தனி அதிகாரியிடம் கோரிக்கை மகஜர்
#### மார்க்சிஸ்ட் தோழர்கள் அளித்தனர்

மதுரை, டிச 13— மதுரை மாநகர் சாத்தமங்கலம் பகுதியில் உள்ள குறைபாடுகளைக் களையக் கோரும் மகஜர் ஒன்றை மாநகராட்சி தனி அதிகாரியிடம் அப்பகுதிமார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்கள் வி ரெங்கசாமி, ஜி கே சந்திரசேகரன் ஆகிய இருவரும் சமர்ப்பித்து தக்க நடவடிக்கை எடுக்கக் கோரினர். இந்த மகஜரில் இப்பகுதிமக்களிடம் 350 கையெழுத்துக்கள் பெறப்பட்டிருந்தன.

அந்த மகஜரில், இப்பகுதியில் 60 மின்விளக்குகளில் 19-தான் நல்லமுறையில்எரிவதாகவும், 8 போரிங் பைப்புகளில் (அடி பைப்) 4-தான் நல்ல முறையில் இருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. தவிர, கக்கூஸ் வசதி, ரோடு வசதி, சுகாதார வசதி முதலியன செய்யவேண்டும் எனவும், பள்ளிக்கூடம் ஒன்று கட்டவேண்டும் எனவும், கொசுத் தொல்லையைப் போக்குவதற்கு தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும் எனவும் கோரப்பட்டுள்ளது

---

## ஆசிரியருக்கு

### ரயில்வே நிர்வாகம் கவனிக்குமா?

ஐயா,

கடந்த 1—11—75ந் தேதி முதல் ரயில்வேயில் 'சீசன் டிக்கெட்' ஒன்றுக்கு 10 கிலோ எடையுள்ள பொருட்களைத் தான் கொண்டு செல்லலாம என்ற சட்டம் போடப்பட்டுள்ளது.

இந்தச் சட்டத்தினல் பெரிதும் பாதிக்கப்படுபவர்கள் பால்காரர்களும், அலுவலகங்களுக்குச் சாப்பாடு எடுத்துச் செல்பவர்களும், காய்கறி வியாபாரிகளும் தான். ஏற்கனவே 35 கிலோ வரை கொண்டு போகலாம் என்றிருந்தது. இப்போது 10 கிலோதான் கொண்டு போகலாம் என்ருல், சுமார் 5படி பால்தான் கொண்டு போக முடியும். அதற்கு மேல் கொண்டு போனல் ரூ 10 அபராதமாம்.

காஞ்சிபுரத்திலிருந்து சென்னை கடற்கரைக்குச் செல்லும் இரு ரயில்களிலும் சுமார் ஆயிரம் பால்காரர்கள் சென்று வருகிருர்கள். ஐந்துபடி பால் கொண்டு சென்ருல் படிக்கு 50 காசு தான்—ரூ 2-50தான் கிடைக்கும். அதைக்கொண்டு விலைவாசி ஏகமாய் உயர்ந்துள்ள இச்சூழ்நிலையில் என்ன செய்ய முடியும்? மேலும் பால் குறித்த நேரத்தில் போய்ச் சேரவில்லையானல் கெட்டுவிடும்.

மேலும், அலுவலகங்களிலும் இதரதொழில்களில் பணிபுரியும் ஊழியர்களுக்கும் சாப்பாடுகொண்டுசெல்பவரையும் இச்சட்டம் பாதிக்கிறது. அதாவது இப்போது குறிப்பிட்டுள்ள 10 கிலோ எடைக்கு மேல் டிபன்பாக்ஸ் கொண்டு சென்ருல் ரூ 10 அவர்களிடம் அபராதம் பெறப்படுகிறது கொண்டு செல்வதே 10, 12, டிபன்கள் தான். ஒரு சாப்பாட்டுக்கு ரூ 5 முதல் 8 வரை கிடைக்கும். சீசன் டிக்கெட்வாங்கி கொண்டு போவார்கள். அவர்களை மாதம் 5 நாள் பிடித்தால் அவர்கள்நிலைமை என்னவாகும்?

மேலும் கிராமங்களில் காய்கறிகள் பயிர்செய்து சென்னைக்கு வந்து பிழைப்பு நடத்தும் சிறு விவசாயிகளையும் இச்சட்டம் விட்டுவைப்பதில்லை. தலைச்சுமை தொழிலாளர்களும் பாதிக்கப்படுகிருர்கள். ஆகவே, முன்பிருந்த35 கிலோ என்ற முறையை மீண்டும் அமுலாக்கி ஏழைமக்களை வாழவைக்க சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும அரசையும்கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு
மு ஏழுமலை
மார்க்சிஸ்ட்கமயூனிஸ்ட் கட்சி
பேரனூர்

---

## தமிழக பஞ்சாலைத் தொழிலாளர்கள் சம்பளத்தை பெருமளவில் குறைத்துக் கொள்ளணுமாம்
### கொள்ளை லாபம் குவித்த முதலாளிகள் கோருகிருர்கள்

மதுரை, டிச. 13— பஞ்சாலைத் தொழிலில் தோன்றியுள்ள கஷ்டமான நிலைமையைக் கருதி, பஞ்சாலைத் தொழிலாளர்கள் தங்களது சம்பளத்தை பெருமளவில் குறைத்துக் கொள்ளவேண்டும் என்றும், அதற்கானவழிவகைகளை தொழிற்சங்கத் தலைவர்கள் செய்யுமாறும் தமிழ்நாடு பஞ்சாலை அதிபர்கள் சங்கம் கேட்டுக் கொண்டுள்ளது. அவ்வாறு குறைத்துக் கொள்ளாவிட்டால் மில்கள் நலிந்துபோய் விடும் நிலைமை ஏற்பட்டுவிடுமாம்.

இதற்காக அச்சங்கம் விடுத்துள்ள ஒரு பத்திரிகை அறிக்கையில் வாதங்களும் சாட்சியங்களும் காட்டப்பட்டுள்ளன.

இதற்காக ஏராளமான பணச்செலவில் ஆங்கில தமிழ்ப்பத்திரிகைகளில் பெரிய பெரிய விளம்பரங்களும் செய்துள்ளனர்.

1974 செப்டப்பர் முதல் 15 மாத காலமாக ஜவுளித் தொழிலில் நெருக்கடி காரணமாக இத்தொழிலின் பொருளாதார நிலைமை மோசமடைந்து விட்டதாம். அநேக மில்களில் சென்ற ஆண்டிலும் நடப்பு ஆண்டிலும் அநேகமில்களில்பெரும் நஷ்டம் ஏற்பட்டுள்ளதாம். தவிர மின்சாரத்துக்காகவும், பிராவிடண்ட்பண்ட் விஷயத்திலும் ஏராளமான பணம் கட்ட வேண்டியுள்ளதாம். இங்கிலையில், அரசாங்கம் தீவிர நடவடிக்கைகள் எடுப்பதுடன், தொழிலாளர்களும் ஒத்துழைக்க—அதாவது தமது சம்பளத்தைபெருமளவில் குறைக்க—முன்வர வேண்டுமாம்.

இதற்கு, சில மாநிலங்களின் சம்பள விகிதங்களை சாட்சியமாகவும் முன் வைக்கிருர்கள் முதலாளிமார்கள். அதாவது, பஞ்சாலைத் தொழிலாளி ஒருவரின் சராசரி சம்பளம் ஆந்திராவில் ரூ 250 ஆகவும், கர்நாடகத்தில் ரூ 350 ஆகவும் இருக்கிறதாம். ஆனல் தமிழ் நாட்டில் ரூ 450 தரப்படுகிறதாம்.

---

## பஞ்சாலையில் லாபம்: அமைச்சர் சாட்சியம்

பஞ்சாலை முதலாளிகள் வாரிக் கொட்டியுள்ள கொள்ளை லாபம் பற்றி மத்திய தொழிலாளர் நல அமைச்சர் திரு கே வி ரகுநாத ரெட்டி கூறுகிருர்:

"1971—72ல் பெற்ற லாபத்தைவிட 500சதவீதம் லாபம் அடைந்த இந்த கனவான்கள் (ஜெண்டில்மேன்ஸ்), இப்போது வந்து—லாபம் பெற இயலவில்லை, தங்களது சரக்குகளை விற்க முடியவில்லை என்று புகார் கூறுகிருர்கள்."

[கடந்த 25—11—75ந் தேதி பம்பாயில் வலது கம்யூனிஸ்ட் தலைமையிலான 'சர்வதேச தொழிலாளர் சங்கம்' சார்பில் 'பஞ்சாலைத் தொழிலில் பெண் தொழிலாளர் நிலைமை' குறித்துநடந்த கருத்தரங்கில் பேசியது]

---

## கொள்முதல் விலை குறித்து தமிழக அரசுக்கு மத்திய அரசு உத்தரவு

சென்னை, டிச. 16— மட்ட ரக நெல்லிலிருந்து உயர்ந்த ரக நெல் வரை, ரக வாரியாக முறையே குவிண்டாலுக்கு ரூ 74, ரூ. 78, ரூ. 83, ரூ. 86-தான் கொடுக்க வேண்டுமென்று தமிழக அரசுக்கு மத்திய அரசு தாக்கீது அனுப்பியுள்ளதாக தெரிகிறது. மேற்கூறிய விலைகளுடன் குவிண்டால் ஒன்றுக்கு போனசாக ரூ. 10-ம் போக்கு வரத்து முதலிய செலவுகளுக்காக ரூ, 5-ம் ஆக மொததம் குவிண்டாலுக்கு ஒவ்வொரு ரகத்திற்கும் ரூ. 15 கூடுதலாக தந்து கொளமுதல் தமிழகத்தில் செய்யப்பட்டுள்ளது. இந்தச் செய்தியை உணவமைச்சர் திரு. மாதவன் வெளியிட்டுள்ளார்.

குறுவை அறுவடையில் தஞ்சை மாவட்டத்தில்லெவி விகிதங்கள் ஒன்றும் நிர்ணயிக்காமல் வெளி மார்க்கெட்டில விற்பனைக்கு வந்ததைத்தான் அரசினர் வாங்கினர்களென்றும், சம்பா அறுவடையில் தஞ்சையில் எந்த முறையைக் கையாண்டு கொள்முதல் செய்யவேண்டுமென்றுஇன்னும் தமிழக அரசு முடிவு செய்யவில்லை என்றும் அவர் கூறினர்.

விவசாயபொருட்களின் விலை நிர்ணயக் கமிஷன் 1975—76-ல தமிழகத்துன் கொள்முதல் குறிக்கோள் 6 லட்சம டன் என நிர்ணயித்திருக்கிறதென்றும், குறுவையில் 2.6 லட்சம் டன் அரிசி, சர்க்காரால் வாங்கப்பட்டுவிட்டதென்றும் சம்பா அறுவடையில் சர்க்காரின் அரிசிக்கொள்முதல்3லட்சம் டன்னுக்கு குறையாது என்றும்அமைச்சர் அறிவித்தார்.

---

### உண்ணுவிரதமிருந்த தி.மு.க ஊழியர்கள் கைது
#### அனைத்துச்சங்க கண்டன ஆர்ப்பாட்டம்

சுசீந்திரம், டிச. 13— மின் ஊழியர்களின் கோரிக்கைகளை வற்புறுத்தி நாகர்கோவிலிலுள்ள கன்னியாகுமரி மின் திட்டமத்திய அலுவலகம் முன்பு உண்ணுவிரதமிருந்த திமுக சங்க ஊழியர்களை போலீசார் கைது செய்தனர். இதற்குக் கண்டனம் தெரிவித்து இங்குள்ள மின்வாரிய வருவாய் பிரிவு அலுவலகம் முன்பு மதிய உணவு இடைவேளையிலும், மாலையில் பணி முடிந்த பின்னும் ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. இந்த ஆர்ப்பாட்டத்துக்கு சிஐடியூ, வலது கம்யூனிஸ்ட் சார்பான சம்மேளனம், கணக்காயர் சங்கம் ஆகியவற்றைச் சார்ந்த ஊழியர்கள் கலந்து கொண்டனர்.

இதே போல், நாகர்கோவிலில் உள்ள வருவாய் பிரிவு அலுவலகம் முன்பும் மாலையில் ஆர்ப்பாட்டமநடந்தது. கைது செய்யப்பட்டோர் பின்னர் விடுதலை செய்யப்பட்டனர்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் [6/16 பைபாஸ் ரோடு மதுரை 625018] அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் எம் ஆர் வெங்கட்ராமன்.

---

## நாய் தின்னும் உணவை மனிதன் தின்கிருன்!

நியூயார்க், டிச. 12— குபேரபுரியென்றும் சொர்க்கபூமியென்றும் முதலாளித்துவ ஏடுகளால் வர்ணிக்கப்படும அமெரிக்காவில் நாய்தின்னும் உணவை மனிதன் தின்று கொண்டிருக்கிருன்!

ஆமாம், அமெரிக்காவில் பத்து லட்சத்துக்கு மேற்பட்ட மனிதர்கள் நாயின் உணவைத்தின்று ஜீவிக்கிருர்கள் என்று துணைப்பேராசிரியர் டாக்டர் எட்வர்ட் எச். பி. ப்லெஸ் என்பவர் கூறுகிருர். இவர், வர்ஜீனியா காமன் வெல்த் பல்கலைக்கழகத்தின் துணைபேராசிரியர் ஆவார்.

வசதி படைத்தவர்கள் வளர்க்கின்ற நாய்களுக்காக டின்னில் அடைத்த 'உணவு' அமெரிக்க சூப்பர் மார்க்கெட்டில் விற்பனை செய்யப்படுகிறது. குறைந்தபட்சம் இரண்டரை லட்சம் அமெரிக்கக் குடும்பங்களில் முக்கிய உணவு இந்த நாய்தின்னும் உணவேயாகும் என்று அவர் கூறுகிருர்.

இந்தக் குடும்பங்களுள் பெரும்பான்மையானவை சேரிப்புறங்களில் இருப்பவையாகும்.

நாய் தின்னும் உணவில் மூன்றில் ஒரு பங்கை சேரிமக்களே வாங்கித்தின்று விடுகிருர்கள் என்று பல வருடங்களுக்கு முன்னரே செனட் கமிட்டியின் சத்துணவுக்கமிட்டி ஒப்புக்கொண்டுள்ளது.

அமெரிக்காவின் கப்பற்படைக்குப் பொறுக்கியெடுக்கப்பட்ட இருபதினுயிரம் பேர்களில் ஐம்பது பேரை சமூகவியல் ஆராய்ச்சியாளர் ஒருவர்பேட்டிகண்டார். ஐந்து முதல் எட்டு சதவிகிதம் வரையுள்ள இளைஞர்கள நாய்தின்னும் உணவை மட்டுமல்ல, மனிதனே தின்னமுடியாத ஏனைய பல உணவுகளையும் தின்கிருர்கள் என்பதை அவர் அறிந்தார்.

---

## ஜெ. பி. உடல்நிலை
### 7-வது முறையாக செயற்கை சிறுநீரகம்

பம்பாய், டிச. 12— இங்கு சிறுநீரகக் கோளாறு காரணமாக சிகிச்சை பெற்றுவரும் சர்வோதய தலைவர் திரு. ஜெயப்பிரகாஷ்நாராயணுக்கு கடந்த 12-ந் தேதியன்று மீண்டும் செயற்கை சிறுநீரகம் பொருத்தப்பட்டது.

கடந்த நவ 22- முதல் இங்குள்ள ஜஸ்லோக் மருத்துவமனையின் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்றுவரும் இவருக்கு இவ்வாறு செயற்கை சிறுநீரகம் பொருத்தப்படுவது 7 வது தடவையாகும். ஆனலும் அவரது உடல்நிலை நன்ருக உள்ளது என்றும், உற்சாகமாகக் காணபபடுவதாகவும் மருத்துவமனைக் குறிப்பு கூறுகிறது.

இங்கு சிகிச்சை பெற்று வரும் சமயத்திலேயே இவருக்கு மூச்சுத்திணறலும், லேசான மாரடைப்பும் ஏற்பட்டது, நீர் பிரிவதில் கோளாறு ஏற்பட்டது.

எனவே இவர், இரண்டு அல்லது மூன்று முறை ஆபத்தான நோயாளிகளுக்குரிய தீவிர கண்காணிப்பு பிரிவில் அனுமதிக்கப்பட்டார்.

இவரது உடல்நிலை குறித்துவரும் மருத்துவமனை குறிப்புகள்— ஒரு நாளைக்கு நன்ருக உள்ளார், சிற்றுண்டி உண்டார், 4மடங்கு காபி சாப்பிட்டார் என்றும், மற்றொரு நாளைக்கு தீவிர கண்காணிப்புப் பிரிவில் அனுமதிக்கப்பட்டு தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டதாகவும்—மாறிமாறி வருகின்றன,

---

### காங்கிரஸ் சொத்து விவகாரம்: பக்தவத்சலம் மனு மீது உத்தரவு

சென்னை, டிச. 13— அறக்கட்டளை (டிரஸ்டி) பெயரில் 'இந்தியன் வங்கி'யில் உள்ள "தமிழ்நாடு ஸ்தாபனக் காங்கிரசின் பணததை எடுக்கக்கூடாது' என்று தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் திரு பி. ராமச்சந்திரனுக்கு சென்னை உயர்நீதி மன்றம் இடைக்காலத் தடை விதித்துள்ளது.

முன்னுள் முதலமைச்சரும், இந்திரா காங்கிரஸ் தலைவரும், அறக்கட்டளை உறுப்பினருமான திரு எம் பக்தவத்சலம் தொடர்ந்த வழக்கின் மீது இந்த இடைக்கால உத்திரவை நீதிபதி பி மோகன் பிறப்பிததார்.

இவ்வழக்கு சம்பந்தமான விசாரணை வருகிற 17ந் தேதிக்கு தள்ளி வைக்கப்பட்டது.

தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ தலைவராக திரு பி ராமச்சந்திரன் நீடிப்பதை எதிர்த்து இணைப்பு ஆதரவாளரும 'நவசக்தி' ஆசிரியருமான திரு தனுஷ்கோடி நாடார் மற்றொரு வழக்கு தொடர்ந்துள்ளார். இவ்வழக்கு மீதான விசாரணையும் 17ந் தேதி நடைபெறும் என்றும் நீதிபதி பி மோகன் அறிவித்தார்,

---

## உத்தமபாளையம் தாலுகா கட்சி நிதி வசூல்

மதுரை மாவட்டம் உத்தமபாளையம் தாலுகாவில் அண்மையில் நடந்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி நிதிவசூல் விவரம் வருமாறு:—

| | ரூ—பை |
|---|---|
| சுருளியார் மின்திட்ட | |
| கூடலூர் | 3472—00 |
| கம்பம் | 7353—50 |
| க புதுப்பட்டி | 1870—00 |
| சின்னமனூர் | 538—00 |
| கோம்பை | 1250—00 |
| உத்தமபாளையம் | 2139—00 |
| காமயக்கவுண்டன்பட்டி | 2159—00 |
| ஊழியர்கள் | 300—00 |
| தாலுகா மின்சாரத் தொழிலாளர்கள் | 458—00 |
| பண்ணைப்புரம் | 27[illegible] |
| போடி | 33[illegible] |
| கருநாகமுத்தன்பட்டி | [illegible] |
| சுருளிபபட்டி | [illegible] |

## இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு

அத்தியாயம்-9

# சிப்பாய்க் கலகமா? மக்கள் போராட்டமா?

இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட்



1857 முதல் 1859 வரை இந்தியாவில் நடந்தது வெறும் 'சிப்பாய்க்கலகம்'தான் என்றும், அதற்கு இந்திய மக்களின் ஆதரவு எவ்விதத்திலும் இல்லையென்றும் அன்று பிரிட்டிஷார் பிரச்சாரம் செய்தனர்.

பிறகு, தேசிய சுதந்திர இயக்கம் எழுந்த நுடன் பிரிட்டிஷாரின் அந்தக்கருத்துக்கு எதிராக வேறொரு கருத்து உருவானது. 'சிப்பாய்க்கலகம்' ஒரு சுதந்திரப் போராட்டமாக இருந்ததென்றும் அதற்கு மக்களின் ஆதரவு தெளிவாக இருந்ததென்றும் வாதிக்கின்ற வரலாற்றாசிரியர்கள் தோன்றினர்.

சுதந்திரப் போராட்டத்தில் முன்னப்பாக பங்கேற்ற—நீண்டகாலம் வரை சிறையில் வதைபட்ட—விநாயக தாமோதர சவர்க்கார் என்பவர், முதலாவது இந்திய சுதந்திரப் போராட்டம் என்னும் தலைப்பில் நூலொன்று எழுதினர். அதுவரை வெளிச்சத்திற்கு வராமலிருந்த பல உண்மைகளையும் அதிகார பூர்வமான ஆதாரங்களையும் அவர் வெளிக்கொண்டுவந்தார்.

### புதிய மதிப்பீடு

சவர்க்காரைத்தொடர்ந்து ஏனைய ஏராளமான அரசியல் இயக்கவாதிகளும், வரலாற்று வல்லுனர்களும் 1857—59 ஆண்டுகளில் நடந்த போராட்டத்தைத் மதிப்பீடு செய்யும் பணியில் இறங்கினர். தேசியவாதிகள் கொண்டிருந்த நிலைபாட்டினை அடிப்படையாகக் கொண்டு இந்த மதிப்பீட்டை அவர்கள் நடத்தினர். இவர்கள் நடத்திய விரிந்த ஆய்வின் விளைவாக 1857—59-ம் காலத்தின் ஆரம்ப நிகழ்ச்சிகளில் நேரடியாகக் கலந்து கொண்டோ, அந்த நிகழ்ச்சிகளைப்பற்றி தெரிந்துகொண்டவர்களாகவோ இருந்த பிரிட்டிஷ் அதிகாரிகளும், வரலாற்று ஆசிரியர்களும் சிப்பாய்க் கலகத்தைப்பற்றி முரண்பட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தார்கள் என்ற உண்மை வெளிப்பட்டது.

கானல் மல்லீசன், சர் ஜான் வில்லியம்செய், சாரல்ஸ் பால், ரெவ், அலெக்சாண்டர் டஃப் முதலிய பலரும் சிப்பாய்க் கலகம் நடத்தியவர்களுக்கு வெகு ஜனங்களின் ஆதரவு இருந்தது எனபதற்கு ஏராளமான எடுத்துக்காட்டுகளைத் தந்தனர்.

ஜான் வில்லியம் கெய் கூறுகிறர்: கங்கைக்கும் யமுனைக்கும் நடுவே இருக்கும் இந்துக்களிலோ முஸ்லிம்களிலோ நமக்கு எதிரா இல்லாத ஒரு ஆள் கூட இல்லை."

முல்லீஸன் என்பவர் கூட "ஒளத்" [அயோத்தியா] ரோஹில்கண்டா, புந்தேல் கண்டா, ஸாகர், நர்மதா ஆகிய [பிரதேசங்களில் பெரும்பான்மை மக்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக இருந்தார்கள் என்ற கருத்தைக் கொண்டிருந்தார்.

பிரிட்டிஷ் பார்லிமெண்டில் இதுசம்பந்தமாக நடைபெற்ற விவாதத்தில் கலந்து கொண்டவரும், பின்னர் பிரதமராக ஆனவருமான டிஸ்ரேலிகூட, அன்றைய இந்திய சுதந்திரப் போராட்டத்தை வெறும் சிப்பாய்க்கலகமாகத் தரம் தாழ்த்திக் காட்டுவதை எதிர்த்தார்.

1947-ம் ஆண்டைத் தொட்டு மற்ற பல ஆராய்ச்சிகளுக்குக் கிடைத்தது போன்று, சுதந்திரப் போராட்ட வரலாற்று ஆராய்ச்சிக்கும் ஓர் உத்வேகம் கிடைத்தது. 'சிப்பாய்க் கலகம்' என்றழைக்கப்பட்ட சுதந்திரப் போராட்டத்தின் நூறுவது ஆண்டு அரசாங்கத்தின் சார்பிலேயே விழாவாகக் கொண்டாடப்பட்டது. விழாவினை முன்னிட்டு விரிவான ஆராய்ச்சி பணி உருவாக்கப்பட்டது. இந்திய சுதந்திரப் போராட்டத்தின் பொது வரலாறு, 1857—59 ஆண்டுகளில் நடந்த போராட்டத்தின் விசேட வரலாறு—ஆகியவற்றை எழுதுவதற்காக அன்று மத்திய கல்வி அமைச்சராக இருந்த அப்துல்கலாம் ஆஸாத் [illegible] நேரடித்தலைமை [illegible] கள் அமைக்கப் [illegible]

முன் அத்தியாயங்களில் பல தடவை நாம் மேற்கோள் காட்டிய பேராசிரியர் தாரா சந்தின் "சுதந்திரப் போராட்ட வரலாறு" என்னும் நூல். இது அரசாங்கத்தின் சார்பில் அதிகாரபூர்வமாக உருவாக்கப்பட்டதாகும். இதைத்தவிர, அரசாங்க சார்பற்ற வகையில்கூட, டாக்டர் ஆர். சி. மஜூம்தாருடைய தலைமையில், பிரபலமான ஒரு வரலாற்றுத் தொகுப்பு நூலும் வெளியிடப்பட்டது. இவை இரண்டையும் விட சிறிய அளவில் இருந்தபோதும் கூட, இன்னும் ஏராளமான நூல்களும் சிறு நூல்களும் கட்டுரைத் தொகுப்புகளும் வெளிவந்தன.

### முதல் சுதந்திரப் போராட்டத்தைப் பற்றிய இன்னும் இரண்டு பார்வைகள்

ஆனல், 1857-59 ல் நடந்த போராட்டத்தின் தன்மை உள்ளடக்கம் ஆகியவற்றைப்பற்றிய அணுகுமுறை ஆரம்ப காலத்திலிருந்தது போன்று இல்லாவிட்டாலும் அடிப்படையான இரண்டு வேறுபட்ட அணுகுமுறை பின்னரும் வரலாற்று அறிஞர்களுக்கிடையே இருந்து கொண்டிருந்தது.

அதாவது முன்பு ஆங்கிலேய ஆட்சியாளர்கள் சொன்னது போன்று, 'வெகுஜன ஆதரவு இல்லாத வெறும் சிப்பாய் கலகம்" என்று சித்தரிப்பது சரியல்ல இருந்த போதிலும், சிப்பாய்களோ பொதுமக்களோ அரசாங்கத்திற்கெதிராக ஆயுதமேந்திப் போராடியது, நாட்டை ஆங்கிலேய ஆதிக்கத்திலிருந்து விடுதலை செய்வது என்ற அரசியல் நோக்கத்தை முன்வைத்து அல்ல; அவர்களின் லட்சியம் முற்றிலும் சுயநலமாகவே இருந்தது. இதுதான் மேற்கூறிய இரண்டு கருத்துக்களுள் ஒன்று. மற்ற கருத்து யாதெனில், 1857-59ல் நடந்த போராட்டம் ஒரு வெகுஜன போராட்டமாகத்தான் இருந்தது என்பதாகும்.

இந்த இரண்டு கருத்துக்களுள் முதலில் கூறிய கருத்தை தீவிரமாகப் பிரச்சாரப்படுத்தியவர் டாக்டர் மஜூம்தார். இரண்டாவது கருத்தைக் கொண்டிருந்தவர் டாக்டர் எஸ் பி செளதிரி. அதே வேளையில் இந்த இரண்டு கருத்துக்களையும் முற்றிலும் மறுக்காத இன்னொரு இடைப்பட்ட கருத்தும் எழுந்து வந்தது. அதாவது, அரசாங்கத்தின் சார்பில் அதிகாரப்பூர்வமாகவும் மௌலானா அபதுல்கலாம் ஆசாத் அவர்களின் முன்னுரையோடும் வெளியிடப்பட்ட "1857" என்ற வரலாற்று நூலின் ஆசிரியர் டாக்டர் எஸ் என் சென் இதுபற்றி தனது கருத்தை இவ்வாறு கூறுகிறர். "அயோத்தியாவிலும் அதை சுற்றியுள்ள பிரதேசங்களிலும் அது ஒரு வெகுஜனப் போராட்டமாக இருந்தது. ஆனல், மற்ற இடங்களில் அது வெறும் சிப்பாய்களின் கலகமாகத்தான் இருந்தது."

### அசைவற்ற உறுதியான வெகுஜன ஆதரவு

ஆனல், இங்கு ஒரு விஷயத்தை நாம உன்னிப்பாக கவனிக்க வேண்டும். அதாவது, 1857-59-ல் நடந்த போராட்டத்தை, ஒரு சுதந்திரப் போராட்டமாக சித்தரிப்பதை வன்மையாக எதிர்க்கின்ற ஒரு அறிஞர்தான் டாக்டர் ஆர் சி மஜூம்தார். இருந்தபோதிலும் அவர்கூட, அதனை வெறும் சிப்பாய்க கலகமாக சித்தரிக்க விரும்பவில்லை. ஏனெனில் அவர் தன்னுடைய நூலுக்குக் கொடுத்த தலைப்புகூட, '1857-ல் நடந்த சிப்பாய்க்கலகமும் மக்கள் போராட்டமும்' என்பதாகும். இந்தத் தலைப்பை நியாயப்படுத்தி அவர் கீழ்கண்டவாறு எழுதியுள்ளார்:

"அந்தஇயக்கத்தைப்பற்றி நமக்கு ஏற்படுகின்ற கருத்து எதுவாக இருந்தாலும் சரி, அதனுடைய தன்மையை சரியாக எடுத்துக்காட்டுவதற்குப் பொருத்தமான ஒரு தலைப்பு இதுதான் என நான் கருதுகிறேன். மக்கள் போராட்டம் என்ற வார்த்தைக்கு இங்கு நான நினைக்கின்றபொருள் யாதெனில், ஆட்சியாளர்களிடம் கொண்டுள்ள ஆதரவை மக்கள் கைவிட்டு விட்டார்கள் என்ற சாதாரண அர்த்தத்தில் மட்டுமேயாகும்.

அதனுடைய உள்ளடக்கம் சம்பந்தமாக அனுகூலமான முறையிலோ, அனுகூலமற்ற முறையிலோ உள்ள எவ்வித தார்மீக—மதிப்பீடும் இந்த வார்த்தையின் மூலம் நான் உத்தேசிக்கவில்லை."

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில், இந்தப்போராட்டத்தைப் பற்றி கருத்துக்கூறியுள்ள சில பிரபல ஆங்கிலேய அதிகாரிகள், வரலாற்றுசிரியர்கள் ஆகியவர்களின் பெயர்களைக்குறிப்பிட்டிருங்கோம் அல்லவா? இவர்களிலிருந்து தொடங்கி டாக்டர் ஆர். சி. மஜூம் தாரைப்போன்ற இந்திய வரலாற்றுசிரியர்கள் உட்பட 1857—59-ல் நடந்த போராட்டத்தின் இலட்சியத்தின் மீது அனுதாபம் இல்லாதவர்கள் கூட ஒரு உண்மையை ஏற்றுக்கொள்ளத்தான் செய்கிறர்கள் அதாவது அந்தஇயக்கத்தின் பின்னல் அணிதிரண்டு நின்ற வெகுஜன ஆதரவையும் பின்பலத்தையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளத்தான் செய்கிறர்கள். இன்றைய உத்தரப்பிரதேசம், பீகார், மத்தியப்பிரதேசம் ஆகியவற்றின் சில பகுதிகளிலுள்ள, கிராமப்புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் ஒன்று போல் லட்சக்கணக்கான மக்கள் கலந்து கொண்டு நடத்திய ஒரு மாபெரும் போராட்டம்தான 1857-59 ல் நடந்த போராட்டம் என சந்தேகமின்றி கூறலாம்.

அதே வேளையில், இந்த பிரதேசங்களுக்கு வெளியே நடந்த பல போராட்டங்கள் அனைத்தும் வெகுஜன ஆதரவற்ற இயக்கமாகத்தான் இருந்தது என்பது உண்மைதான். உதாரணமாக தென்னிந்தியா முழுவதும் வங்காளம் உட்பட கிழக்கிந்தியாவிலும், பஞ்சாபிலும் ஏனைய பல பிரதேசங்களிலும் நடந்த போராட்ட இயக்கங்கள் வெகுஜன ஆதரவு இல்லாமல்தான் நடந்தப்பட்டன. இந்தப் போராட்டங்களை, ஒரு சுதந்திரப் போராட்டமாகவும் மக்கள் போராட்டமாகவும் சிறப்பாக சித்தரிக்கும் டாக்டர் செளதிரியைப் போன்ற அறிஞர்கள் கூட இந்த உண்மையை (அதாவது வட இந்தியாவைப் போன்று வெகுஜன ஆதரவு இல்லை என்பதனை) ஒப்புக் கொள்ளத்தான்செய்கிறர்கள்.

### மூன்று கணிப்புகள்

இந்த இரண்டு விதமான கருத்துக்களைக் கொண்ட அறிஞர்களும் ஒரு முகமாக ஏற்றுக கொள்கின்ற இந்த உண்மைகள் அனைத்தையும இணைத்து பரிசீலனை செய்யும்போது நாம் கீழ்காணும் முடிவுக்கு வர முடியும்.

[1] ஆங்கிலேய எதிர்ப்புப் போராட்டத்தில் பிரதான பாத்திரம் வகித்த பிரிவினர் சிப்பாய்கள்தாம். எனவே அவர்களது போராட்டம் ஒரு சிப்பாய்க் கலகமாகத்தான் இருந்தது.

(2) ஆனல், அந்த சிப்பாய்க் கலகத்திற்குப் பின்னல் மக்களின் கடுமையான அதிருப்தியும் இணைந்து நின்றது. ஆகையால, சிப்பாய்கள் கலகத்திற்குத் தயாரானபோது (சில இடங்களில் சிப்பாய்களின கலகம் தொடங்குவதற்கு முன்னலேயே) நாட்டிலுள்ள ஏழை மக்களும் போராடத் துவங்கினர்கள்.

நகரப்புறங்களிலும் கிராமப்புறங்களிலும் உள்ள ஏழை மக்கள், தங்களை நாள்தோறும் சுரண்டி நாசம்செய்து கொண்டிருக்கும் ஆட்சியாளர்களுக்கு எதிராகவும், இந்த ஆட்சியாளர்களின் நிழலில் செழித்து வளர்கின்ற புதிய பணக்காரர்களுக்கு எதிராகவும் கலகம் செய்ய ஆரம்பித்தார்கள். இவ்வாறு குமுறி எழுந்த மக்கள், அரசாங்க அலுவலகங்களையும் அதிகாரப்பூர்வமான தஸ்தாவேஜுகளையும் நாசம் செய்தார்கள்.

அதோடு மட்டும் நில்லாமல்—அரசாங்க அதிகாரிகள், புதிய பணக்காரர்களான லேவாதேவிக்காரர்கள், வியாபாரிகள் முதலிய வர்களைக் கொன்று குவித்தார்கள். இவற்றையெல்லாம் வைத்துப் பார்க்கும் போது, 1857—59-ல் நடந்த போராட்டத்திற்கு (மேலே பெயர் குறிப்பிடப்பட்டுள்ள பிரதேசங்களைப் பொறுத்தவரை) வெகுஜனப் போராட்டத்தின் தன்மை இருக்கத்தான் செய்தது.

(3) ஆனல் மேலே குறிப்பிட்ட சில பிரதேசங்களில் இந்தப் போராட்டத்திற்கு எந்தவிதமான வெகுஜன ஆதரவும் இல்லை என்பது மட்டுமல்ல, அந்தப் பிரதேசங்களிலுள்ள புதிய தலைமுறையினரான படிப்பாளிகள், இந்த போராட்டத்திற்கு எதிராக—ஆங்கிலேய அரசாங்கத்திற்கு ஆதரவாக—தோளோடு தோள் நின்றனர். இந்தக் காரணங்களை வைத்துப் பார்க்கும் போது சவர்க்காரும், ஏனைய தேசியவாதிகளான அரசியல் தலைவர்களும் வரலாற்று ஆசிரியர்களும் சொன்னது போன்று 1857—59ல் நடந்த போராட்டம் முதல் சுதந்திர போராட்டமாக இருந்தது என்று திட்டவட்டமாக நாம் சொல்ல முடியாது.

இங்கு மற்றொரு முக்கியமான உண்மையையும் எடுத்துக்கூற வேண்டியுள்ளது. ஆங்கிலேயருக்கு எதிராக கலகம் செய்ய முன்வந்த சிப்பாய்களை விட எத்தனையோ பன்மடங்கு இந்தியப் படை வீரர்கள் 1857—59ல் ஆங்கிலேயர்களுடன் விசுவாசமாக நின்று கலகக்காரர்களை அடக்குவதற்கு உதவி புரிந்தார்கள் என்பதுதான் அந்த உண்மை. இவர்களின் உதவி இல்லாமலிருந்தால் கலகம் அடக்கப்பட்டிருக்க முடியாது என்பது மட்டுமின்றி, ஆங்கிலேயர்கள் இந்தியாவிலிருந்து அன்றே ஓடிப்போகவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும் என்பதும் உண்மையே. இந்த உண்மைகளைக் கூர்ந்து பார்க்காமல்தான், பூர்ஷ்வா தேசியவாதிகளும் அவர்களின் கண்ணோட்டத்தை ஏற்றுள்ள வரலாற்று அறிஞர்களும 1857-59-ல் நடந்த போராட்டத்திற்கு "முதல் சுதந்திரப் போராட்டம" என்ற சிறப்புப் பெயர் சூட்டினர்.

### மூன்று பிரச்சினைகள்

ஏற்கனவே எவ்வித முடிவையும் கொண்டிராமல் நடுநிலைமையில் நின்றுமுற்றிலும் விஞ்ஞான ரீதியான கண்ணோட்டத்தோடு, வரலாற்றை ஆய்கின்ற ஒரு மாணவனின் முன்னல், முக்கியமான மூன்றுகேள்விகள் எழுகின்றன.

1) அயோத்தியாவிலும் அதைச்சுற்றியுள்ள பிரதேசங்களிலும் சிப்பாய் கலகத்தோடு மக்களின் கலகமும் இணைந்த ஒரு போராட்டம் வெடித்துக்கிளம்பியதும் அத்துடன், அந்தப்போராட்டம் ஆங்கிலேய ஆட்சிக்குச் சவால் விட்டுக்கொண்டு இரண்டு வருட காலம் நீடித்து நடந்தது எதனல்?

(2) இந்தப் பிரதேசத்திற்கு வெளியே உள்ள பல இடங்களிலும், வெகுஜனப் போராட்டம் இல்லாமல் வெறும் சிப்பாய்க்கலகம் மட்டும் வெடித்துக் கிளம்பியது எதனல்? மற்ற எந்த இடத்திலும் ஏன் எவ்விதமான மக்கள் போராட்டமும் ஆங்கிலேயர்களுக்கு எதிராக நடக்கவில்லை?

(3) போராட்டத்திற்கு முன் வந்த சிப்பாய்களை ஒடுக்குவதற்கு, ஆங்கிலேயருக்கு பெரும்பாலான சிப்பாய்களும் சிவிலியன மக்களும் உதவியும் ஒத்துழைப்பும் அளிக்க [குறிப்பாக படித்தவர்க்கள்) தயாரானது ஏன்?

இந்த மூன்று கேள்விகளுக்குமான பதிலை அடுத்த சில அத்தியாயங்களில் பார்ப்போம். ஆனல் அதற்கு முன் ஒரு விஷயத்தை தெளிவுபடுத்த வேண்டியுள்ளது.

அதாவது, 1857-59 ல் இந்தியாவில் நடந்தது போன்ற சிப்பாய்க்கலகம், (அன்று இந்தியாவின் சில பகுதிகளில் நடந்தது போன்று, வெகுஜனப் போராட்டமும் இணைந்து நடந்ததாக இருந்தாலும் இல்லாவிட்டாலும்) அன்றைய சமுதாயத்தை பாதித்திருந்த ஓர் ஆழமான நெருக்கடியின் அறிகுறியாகும். உலகப்பிரசித்திப் பெற்ற புரட்சிகள் அனைத்திலும், இப்படிப்பட்ட சிப்பாய்க் கலகங்களுக்கு பிரதானமான ஓர் இடம் இருக்கத்தான் செய்தது.

லெனினுடைய பிரசித்திப் பெற்ற பாஷையில் சொல்லப்போனல், சிப்பாய்கள் அல்லது இராணுவ வீரர்கள் "சீருடை அணிந்த விவசாயிகள்" ஆவர். அவர்களின் அதிருப்தியானது, சமூக முரண்பாடுகள் முழுவதையும் காய்ச்சி வடித்து எடுக்கப்பட்ட சத்துக்களாகத்தான் புரட்சிக் கட்டங்களில் அவை வெளிப்படுகிறது. அதனலதான் தொழிலாளர்களையும விவசாயிகளையும் போன்றே இராணுவ வீரர்களுடையவும் புரட்சிகர ஸ்தாபனமாக உயர்ந்து நின்ற சோவியத்துக்களுக்கு ரஷ்யப் புரட்சியின் முன்னேற்றத்தில் மிக முக்கியமான இடமளிக்க லெனின் முன்வந்தார்.

சீன, கொரியா, வியத்னும், கியூபா முதலிய நாடுகளில் சமீபத்தில் நடந்த சோசலிசப் புரட்சிகளிலும் அதற்கு முன்புள்ள எல்லா வரலாற்று காலகட்டத்தில் நடந்த மற்ற புரட்சிகள் அனைத்திலும்கூட, ஆங்காங்கு உள்ள இராணுவ அணிகளில் வளர்ந்து வருகின்ற அதிருப்தியும், அந்த அதிருப்தி வெடித்துக் கிளம்பும்போது ஏற்படுகின்ற கலகமும் மிகப்பிரதான பங்கு வகித்துள்ளது.

### சிப்பாய்கள்

இந்தியாவில் ஆங்கிலேயர் காலத்திய இராணுவ அமைப்பே ஒரு தனி மாதிரியாக இருந்தது அன்றுவரை இருந்த மாதிரியிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு இராணுவ அமைப்பைத்தான் ஆங்கிலேயர்கள் இந்தியாவில் உருவாக்கினர்கள். ஆங்கிலேயர்களுக்கு முன்பு, சமூக கலாச்சாரத் துறைகள் உட்பட எல்லாத் துறைகளிலும் மேலாதிக்கம் வகிக்கின்ற நிலப்பிரபுக்களின் (ஜமீன்தார்கள்) தலைமையில் உருவான ஒரு ராணுவ அமைப்புதான் இந்தியாவில் இருந்து வந்தது. சக்கரவர்த்தி அல்லது மாமன்னர், அவருக்குக் கீழே சிற்றரசர், (பிரதேச மன்னர்] அவருக்குக் கீழே குறுநில மன்னர் என்ற வரிசை முறையில் இருந்து, மக்களை ஒரு புறம் சுரண்டிய போதிலும், மககளுடன் நேரடியாக தொடர்பு வைத்துக் கொண்டிருந்த இந்தப் பிரமுகர்கள்தான், அன்று படைத் தளபதிகளாக இருந்தார்கள்.

மொகலாயச் சக்கரவர்த்திகளின் ஆட்சிக்காலம்வரை இந்த அமைப்புதான் இந்தியாவில் இருந்தது. இவர்களுக்கும் மக்களுக்கும் இடையே இருந்த நெருக்கமான உறவு இராணுவத்திலும் குறிப்பிடத் தகுந்த அளவில் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

இந்த உறவுகளையெல்லாம் முறித்துவிட்டு, புதிய முறையில இராணுவ அதிகாரிகளும படைவீரர்களும் உறவு கொள்ளக்கூடிய (சம்பளத்தையும, உத்தியோக மேலாதிக்க ரீதியான கட்டுப்பாட்டையும் அடிப்படையாக வைத்து) ஒரு இராணுவ அமைப்புக்குததான் ஆங்கிலேயர்கள உருவம அளித்தார்கள். இதுவும போதாதென்று, இந்த புதிய ராணுவத்தின் எல்லா மட்டத்திலுள்ள மேலதிகாரிகளும, அந்நிய நாட்டவர்களாக இருந்தார்கள். எனவே பழைய ராணுவ அமைப்பில் இருந்ததைப் போன்று, தலைவர்களும், சாதாரண வீரர்களும் தங்களுக்கிடையே சமூக-கலாச்சாரத் துறைகள் சம்பந்தப்பட்ட எவ்வித உறவுகளும் வைக்க முடியவில்லை. இது அவர்களுக்கு பெருத்த அதிருப்தியை ஏற்படுத்திற்று. தலைமுறை தலைமுறையாக தங்கள் முன்னோர்கள் பேணிப்பாதுகாத்துவளர்த்த தியசமூக-கலாச்சார அமைப்புகளையும் அவற்றின் மேல் மட்டத்தில் இருந்து வருகின்ற பிரமுகர்களையும ஆங்கிலேயர்கள் தகர்த்து நாசம் செய்கிறர்கள் என்பதனை சிப்பாய்கள் நேரடியாக உணரத் தொடங்கினர். இந்த உணர்வானது, இயற்கையாகவே அவர்களின் கோபத்தையும் ஆத்திரத்தையும் நாட்பட நாட்பட வளமடங்கு வளர்கிற்று.

—தொடரும்

* * *

★★★★[]★★★★

## பறக்கும் மருத்துவ மனை

சோவியத் நாட்டில் 'பறக்கும் மருத்துவமனை'கள் நடைமுறைக்கு வந்துள்ளன.

ஆர்க்டிக் (வட துருவம்) கடற்கரையோரமாக அமைந்துள்ள அரசுப் பண்ணைகளில் வேலை செய்கிற தொழிலாளர்களுக்கு மருத்துவப் பரிசோதனை செய்து சிகிச்சை அளிக்க இப் "பறக்கும்மருத்துவ மனை" பயன்படுத்தப்படுகிறது.

எக்ஸ்ரே யூனிட் மற்றும் பிற மருத்துவ சாதனங்கள், மருந்துகள் ஆகியவற்றுடன் மருத்துவர்கள், டாக்டர்கள் அறுவை சிகிச்சை நிபுணர்கள் ஆகியோர் இதற்கென விசேஷமாக உருவாக்கப்பட்ட விமானத்தில் ஆர்க்டிக் கடலோரப் பகுதிக்கு அவ்வப்போது செல்கிறர்கள்.

அரசாங்கப் பண்ணைகளில் வேலை பார்ப்பவர்களுக்கும், மீன் பிடிப்பவர்களுக்கும், மான் வேட்டை ஆடுகிறவர்களுக்கும் மருத்துவ சோதனைக்கு பின்னர் தக்க சிகிச்சை அளிக்கிறர்கள்.

---

## 4 நீதிபதி பதவிகள் 5 ஆண்டுகளாக காத்தாடுது 11 இடங்களுக்கு ஆள் இல்லை

நாகபுரி, டிச 10— கீழ்நிலைப்பிரிவு நீதிபதிகள் [ஜூனியர் ஜட்ஜுகள்) மற்றும முதல்வகுப்பு மாஜிஸ்டிரேட்டுகளுக்கான 11இடங்கள், யாரும் விண்ணப்பிக்காததால், காலியாக இருக்கின்றன இவற்றில் 4 பதவிகள் 5 ஆண்டு காலமாகவே காத்தாடுதாம்.

இந்த பரிதாப நிலைமை மகாராஷ்டிரா மாநிலத்தில் நிலவுகிறது இத்தகவலை மாநில சட்டமன்றத்தில் சட்ட, நீதித்துறை அமைச்சர் பிகே கட்டல் கடந்த புதன்கிழமை தெரிவித்தார்.

இப்பதவிகளுக்கு விண்ணப்பிக்க யாரும முன் வராததற்கு முக்கிய காரணங்களில அப்பதவிகளுக்கு குறைந்த ஊதியம் வழஙகப்படுவதும் ஒன்று எனறும் அமைச்சர் கூறினர்.

இப்பதவிகளின் ஊதிய விகிதத்தை அண்மையில் அரசு உயர்த்தியிருக்கிறதாம். பப்ளிக் சர்வீஸ் கமிஷனல் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் இப்பதவிகளுக்குக் கிடைக்கிற வரையில், ஓய்வு பெற்ற நீதிபதிகள் இப்பதவிகளில் மறுநியமனம் செய்யப்படுவார்களாம்.

★★★★[]★★★★

---

# அன்னிய மூலதனம் அதிக அளவில் பாய்கிறது

புதுடெல்லி, டிச. 13— அன்னிய மூலதனம் இந்தியாவுக்குள் நுழைவதற்கு பொருளாதார சூழ்நிலைகளை இந்திய அரசு உண்டாக்கிக் கொடுத்திருப்பதால், அன்னிய மூலதனம் இந்தியாவுக்குள் அதிக அளவில் பாய்ந்து கொண்டிருக்கிறது.

இந்திய அரசின் தொழில், சிவில் சப்ளைமந்திராலயத்தின் அன்னிய முதலீடு போர்டு எடுத்துக்கொண்ட தீவிர நடவடிக்கைகளின விளைவாக இந்திய முதலாளிகளுடன அன்னிய முதலாளிகள் கூட்டுறவு கொள்ளுவது அதிகரித்து வருகிறது.

1975 ஜனவரிமுதல் ஜூன் வரையிலாக 6 மாத காலத்தில் பிரிட்டிஷ் முதலாளிகள் 25 தொழில் கூட்டுகளுக்கு அனுமதி கோரியிருந்தார்கள், அதில் 15 கூட்டுகளுக்கு அனுமதி வழங்கப்பட்டுவிட்டது.

இதேகால கட்டத்தில் அமெரிக்காவுடன் 16-ம், மேற்கு ஜெர்மனியுடன் 14-ம், ஜப்பானுடன் 6 கூட்டுகளும் அனுமதிக்கப்பட்டுள்ளன.

கடந்த ஆண்டு 300 அன்னிய முதலீட்டுக் கம்பெனிகள் இந்திய சர்க்காரின் அனுமதியைக் கோரிய மனுக்கள் கிடப்பில் கிடந்தன.

இந்த ஆண்டு உடனுக்குடன் கூடி மனுக்களைப் பரிசீலனை செய்து சீக்கிரமாகவே லைசென்ஸ்கள் வழங்கி விட்டதால், தேங்கிக் கிடக்கும் மனுக்கள் 44-தான் காத்திருக்கின்றன.

### தூதுக் குழுக்கள்

அன்னிய முதலாளிகளுடன் கூட்டுச் சேருவதில் இந்திய முதலாளிகள் சுறுசுறுப்பாக இருக்கிறர்கள் இந்திய—அமெரிக்க வர்த்தக சபை சார்பில் ஓர் தூதுக்குழு ராவுனுக்சிங் தலைமையில் அமெரிக்காவுக்குச் சென்றது. பம்பாயிலுள்ள அமெரிக்க பேங்கியின் தலைவர் டி பி இர்வினும போயிருக்கிறர். இக்குழுவில் பொதுத்துறை தொழில்களின் நிருவாகிகளும் சென்றுள்ளனர்.

பெட்ரோல் உற்பத்தியாகும் நாடுகளில் அமெரிக்கக் கம்பெனிகள் பிரம்மாண்டமான கட்டிடங்களையும், ஆலைகளையும் நிர்மாணித்துக் கொண்டிருப்பதால் அவற்றில் வேலை செய்வதற்கு தேவைப்படும் கட்டிடத் தொழிலாளர்களையும், கட்டிடத்துக்கான பொருள்களையும் அனுப்புவதற்கு என்னென்ன வழிவகைகள் உள்ளன என்பதை இந்தியக்குழு ஆராயுமாம்.

இந்தியாவுக்கு அன்னிய மூலதனத்தை கவர்ச்சிப்பது ஒருபுறமிருக்க, அன்னிய முதலாளிகளுடன கூட்டுச் சேர்ந்து மூன்றும் உலக நாடுகளில் கூட்டாக தொழில்களைத் துவக்குவதற்கான தோதுக்களை இக்குழு ஆராயுமாம்.

இக்குழு மட்டுமின்றி, ஹரீஷ்மகேந்திராதலைமையில் இந்திய வர்த்தக—தொழில் சம்மேளனத்தின் குழு ஒன்று ஈரானுக்குச் சென்றுள்ளது. அங்கு அமெரிக்க கம்பெனிகளைச் சந்தித்துப் பேசுகிறது.

---

# அடித்தளமும் கட்டுக்கோப்பும்

சமுதாய வரலாற்றின் அடிப்படையைத் தீர்மானிக்கும் அஸ்திவாரமாக இருக்கும் பொருளாதார உறவு முறைகள் பற்றி நாம் என்ன புரிந்து கொண்டிருக்கிறோம். ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில், மனிதர்கள், எந்த முறையில், எந்தவகையில், தங்கள் வாழ்க்கைத் தேவைகளை உற்பத்தி செய்து கொண்டு, அந்த உற்பத்திப்பொருட்களை பரஸ்பரம் பகிர்ந்து கொள்கிறார்களோ, அதனை வைத்துத்தானே புரிந்து கொள்கிறோம்.

இந்தப் பார்வையில் உற்பத்திக்கும் போக்குவரத்துக்குமான தொழில் நுட்பங்கள் அனைத்தும் அடங்கும். நமது பார்வையில் இந்த தொழில்நுட்ப முறைகளே பண்ட மாற்றுதலின் முறைகளையும் வழிவகைகளையும் தீர்மானிக்கிறது பொருட்கள் வினியோகிக்கப்படுவதையும் இதுவே தீர்மானிக்கிறது. அத்துடன், பூர்வீகக் குடியமைப்பு கலைந்த பிறகு ஏற்படும் வர்க்கப் பிரிவினைகளையும், அதன் விளைவாகத் தோன்றும் ஆண்டான் — அடிமை என்ற பாகுபாடுகள் மட்டுமின்றி, அரசாங்க அமைப்பு, அரசியல் சட்டதிட்டங்கள், முதலியவற்றைத் தீர்மானிப்பதும் இதுதான் இந்தப் பொருளாதார உறவுகளில் அவை எந்த பூகோள அமைப்பில் செயல்படுகின்றனவோ அவையும் உள்ளடங்கும். மேலும் பூர்வகால ஆரம்பப் பொருளாதாரவளர்ச்சியின் மிச்சசொச்சங்களில் எவையெல்லாம் பின்வந்துள்ள சந்ததியாருக்குபாரம்பரியமாக அளிக்கப்பட்டுள்ளனவோ அல்லது இன்றும் எவ்வகையிலும் பாதிக்கப்படாமல் ஸ்திரமாக இருக்கின்றனவோ இவற்றையும் இப் பொருளாதார உறவுகள்என்றசொற்றொடர்குறிப்பிடும், இன்றைய சமுதாய அமைப்பின் உருவத்தின் சுற்றுச் சார்பும் இதில் அடங்குமென்பது அறியப்படவேண்டும்.

## பொருளாதார நிலைகள்தான் நிர்ணயிக்கின்றன

இந்தத் தொழில் நுட்பங்கள் விஞ்ஞானத்தின் நிலைமையைப் பெரும்பாலும் பொருத்துள்ளது என்று கூறினால் அதைவிட அதிகமான அளவுக்குவிஞ்ஞானமும தொழில் நுட்பத்தின் நிலையையும் அதன் தேவைகளையும் பொறுத்தே இருக்கிறது.

சமுதாயத்திற்கு ஒரு தொழில் நுட்பமுறை தேவையாயிருப்பின் அது பத்து சர்வகலாசாலைகளைவிட விஞ்ஞானவளர்ச்சியை உந்தித்தள்ள உதவும்.

பதினாறும ,பதினேழாம் நூற்றாண்டுகளில் இத்தாலி நாட்டின் மலையருவிகளை ஒழுங்குபடுத்திக் கட்டுப் படுத்தும் அவசியம் டார்ரிசெல்லி முதலியவர்கள் சம்பந்தப்பட்ட'ஹைட்ரோஸ்டேடிக்ஸ்'' என்றநீரியல் விஞ்ஞானம் முழுமையுமே தோன்றியது.

விஞ்ஞானங்களின் வரலாறு ஏதோ வானத்திலிருந்துகீழே விழுந்துள்ளமாதிரி எழுதி வைக்கும் வழக்கம் ஜெர்மனியில் ஏற்பட்ட பிறகுதான்மின்சக்தியைப்பற்றி கொஞ்ச நஞ்சமாவது நமக்கு தெரிந்தது

பொருளாதார நிலைகள் தான் சரித்திரவளர்ச்சியின்போக்கைஇறுதியாக நிர்ணயிக்கின்றன என்று நாம் கருதுகிறோம்.........

## மறக்கக்கூடாத இரு விஷயங்கள்

எனினும், இங்கு, நாம் இரண்டு விஷயங்களைப் பார்க்க மறந்து விடக்கூடாது,

(அ) அரசியல், சட்ட திட்டங்கள், தத்துவங்கள்.இலக்கியம், கலை, —முதலியவற்றின்வளர்ச்சிபொருளாதார வளர்ச்சியின் அடிப்படையையேபொறுத்திருக்கின்றன. ஆனால் இவையெல்லாம் ஒன்றையொன்று பாதிக்கின்றன, பொருளாதார அடிப்படையையும் பாதிக்கின்றன. பொருளாதார நிலைமைதான் காரணம், அது ஒன்றுதான் செயல்பட்டுக்கொண்டிருக்கிறது, மற்றவையெல்லாம் சும்மா இருந்துகொண்டு பாதிப்புகளுக்கு ஆளாகிக்கொண்டிருக்கின்றன என்பதல்ல நிலைமை, இதற்கு மாறாக அடிப்படையான பொருளாதார அவசியத்துடன் பரஸ்பர ஊடுருவல்கள் நடக்கின்றன. இறுதியில் பொருளாதார அவசியம் எப்போதும் தனது பாத்திரத்தை வலியுறுத்துகிறது.

உதாரணமாக அரசாங்கமானது வியாபாரப்பாதுகாப்பு சுங்க வரிகள் மூலமும் கட்டுப்பாடற்ற வியாபாரத்தை அனுமதித்தும், நல்லதோ கெட்டதோ, ஒருநிதி நிர்வாகத்தை மேற்கொண்டு தனது செல்வாக்கை நாட்டில் செலுத்துகிறது.

1648 முதல் 1830 வரைஜெர்மானிய பொருளாதார நிலைமைமிகவும் மோசமாகஇருந்தது. இதிலிருந்து ஜெர்மானிய பிலிஸ்டைன்களின் (கெடுமதியாளர்களின்) அசட்டையும் கையாலாகாத்தனமும் தோன்றி-முதலில்ஆஸ்தீகமாகவும், பிறகு நயம பகட்டாகவும், இளவரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் பல்லைக்காட்டிக் கெஞ்சி வாழ்க்கை நடத்தும் போக்காகவும் காட்சியளித்ததானது பொருளாதார விளைவுகளை ஏற்படுத்தாமல் இல்லை மீண்டும் நல்ல நிலைமைக்கு நாடு திரும்புவதற்கு இவை பெருந்தடையாக விளங்கின. புரட்சிகரத் தன்மையிலிருந்த நெப்போலியன் தொடுத்த யுத்தங்கள் மக்களின் நிரந்தரத் துன்பங்களைத்தாங்க முடியாத அளவுக்கு தீவிரப் படுத்திய பிறகுஏற்பட்ட நிலைதான் ஜெர்மன் சமுதாயத்தை ஒரு குலுக்குக் குலுக்கியது.

## பிரடெரிக் ஏங்கல்ஸ்



## சரித்திரத்தை உருவாக்குவது மக்கள்தான்

எனவேதான், இங்குமங்கும் அவரவர் இஷ்டத்திற்கிணங்க கற்பனை செய்துகொள்வது போல, பொருளாதார நிலைமைகளிலிருந்தே எல்லா விளைவுகளும் தாமாகவே தோன்றிவிடுமென்று நினைப்பது சரியல்ல. மக்கள்தான் சரித்திரத்தை உருவாக்குகிறார்கள், அவர்கள் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில்தான் அவ்வாறு உருவாக்குகிறார்கள். அந்தச் சூழ்நிலையும் இம்முயற்சியைப் பாதிக்கிறது அப்போது ஏற்கெனவே நிலவும் உறவுகளின் அடிப்படையிலும்தான் இவ்வாறு உருவாக்குகிறார்கள். அத்தகையஉறவுகளில் பொருளாதார உறவுகள்தான்—(அவற்றை அரசியல், தத்துவார்த்த உறவுகள் என்னதான் பாதித்தாலும்)—தீர்மானமான பாத்திரத்தை இறுதியில் வகித்து, இவற்றிலெல்லாம் ஒரு மையமான இடத்தைப் பெற்று விளங்குகின்றன. இவ்வாறு பார்ப்பது ஒன்றுதான் தெளிவுக்கு வழியாகும்,

[ஆ] மனிதர்கள் தங்களுடைய வரலாற்றை தாங்களே உருவாக்கிக் கொள்கிறார்கள். ஆனால்இந்தநடவடிக்கை இன்னும் ஒரு கூட்டு, விருப்பத்திலோஒரு கூட்டுத்திட்டத்தின் அடிப்படையிலோ, அல்லது ஒரு குறிப்பிட்ட, வரையறுக்கப்பட்ட சமுதாய அமைப்பிலோ நடைபெறவில்லை. அவர்களின் அபிலாஷைகள் ஒன்றோடொன்று மோதுகின்றன.அக்காரணத்தினாலேயேஅத்தகைய சமூகங்களெல்லாம்'அவசியத்தின்காரணமாகவேசெயல்படுகின்றன. அவசியம் ஒரு பாகமென்றால் தற்செயல் என்பது அதைப் பூர்த்தி செய்யும் மற்றொரு பாகம், ஆனால் என்ன தற்செயல்கள் நடப்பினும் இறுதியில் தனது பாத்திரத்தை அழுத்தமாக வலியுறுத்த முன்வரும்"அவசியம்" என்பது இறுதியில் பொருளாதார அவசியமே.

## ஒருவன் இல்லையென்றால் மற்றொருவன்

இங்குதான், மகான்கள் என்று வர்ணிக்கப்படுபவர்களை நாம்கவனிக்கவேண்டியுள்ளது. ஒரு குறிப்பிட்ட மனிதர், அத்தகைய மனிதர் மட்டுமே, குறிப்பிட்டதொரு சமயத்தில் குறிப்பிட்டதொரு நாட்டில் தோன்றுகிறாரென்பது வெறும் தற்செயலே. ஆனால் அவரை நீக்கிவிட்டால் அவருக்கு பதிலாக மற்றொருவர் வேண்டுமென்ற கோரிக்கை எழும்போது அந்த மாற்று நபர்—நல்லவரோ, கெட்டவரோ — இறுதியில் கட்டாயம் கண்டு பிடிக்கப்படுவார்.

பிரெஞ்சுக் குடியரசானது தனது போர்களின் மூலம் பலஹீனமடைந்திருந்தபோது, ராணுவ சர்வாதிகாரி அவசியப்பட்டபோது நெப்போலியன் என்ற ஒரு குறிப்பிட்ட கார்சிகா நாட்டவன்தான்அந்த ராணுவசர்வாதிகாரியாக ஏற்பட்டான் என்பது தற்செயலே. ஆனால் ஒரு நெப்போலியன் கிடைத்திருக்கவில்லையென்றால் மற்றொருவன் அந்த இடத்தை பூர்த்தி செய்திருப்பான். தேவை ஏற்படும்போது அதற்கேற்ற மனிதன், சீசர், அகஸ்டாஸ் க்ராம்வெல் போல எப்போதும் இடைத்தானென்பது இதற்குச் சான்றாகும்.

காரல் மார்க்ஸ் சரித்திர இயல் பொருள் முதல்வாதத்தைக்கண்டுபிடித்த போது, தியரி, மிக்னெட், குயிஸோட், மற்றும் 1850 வரை இருந்த ஆங்கிலேய சரித்திர ஆசிரியர்கள், இந்தக்கண்டுபிடிப்புக்கு முயற்சி நடந்து கொண்டிருந்ததற்குச் சான்றாகும். மார்கன் என்பவர் இதே உண்மையைக் கண்டுபிடித்தது, இந்தக் கண்டுபிடிப்புக்கான சமயம் பக்குவமாகி விட்டது என்றும், இது கட்டாயம் கண்டு பிடிக்கப்பட்டே ஆகவேண்டுமென்பதையும் நிருபித்தது,

## கடினத்திலும் கடினம்

இம்மாதிரிதான், சரித்திரத்தில் தற்செயல்களைப் போல் தோன்றுபவை உள்ளிட்ட எல்லாத் தற்செயல்களும் தான். நாம் மேன்மேலும் ஆராய்ச்சி செய்யும் பிரத்தியேக விஷயங்கள்,எந்த அளவுக்கு பொருளாதாரத்துறைக்கு அப்பாற்பட்டும் முழுக்க முழுக்க தத்துவ ஆராய்ச்சியை நெருங்கியும் இருக்கின்றனவோ அந்த அளவுக்கு அவற்றின் வளர்ச்சிப் போக்குகளில் "தற்செயல்கள்'' காட்சியளிக்கும். அவற்றின் வளர்ச்சியும் வளைந்து வளைந்து போவதாகத்தான் தென்படும். ஆயினும் —ஆராய்ச்சி விரிவானதாயிருப்பினும், நீண்டகாலத்தையொட்டியிருப்பினும் பொருளாதாரவளர்ச்சியை ஒட்டித்தான் இருக்குமென்பது புலனாகும்.

ஜெர்மனியில் பொருளாதார சரித்திரத்தைப் பற்றிய இலக்கியம் பொறுப்பற்ற முறையில் சட்டைசெய்யப்படாமல் விடப்பட்டுள்ளதானது, ஒரு சரியான தெளிவுக்கு நாம் வருவதற்கு மிகப்பெரிய தடையாக இருக்கிறது, பள்ளிக்கூடத்தில் விடாது போதிக்கப்பட்டு வந்துள்ள சரித்திரப் போக்குகளை மறப்பதென்பது எளிதல்ல. ஆனால் உண்மையான சரித்திரத்தை எழுதுவதற்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய விவரங்களைச்சேகரிப்பது அதைவிடக் கடினமானதாகும்.

[25-1-1894 எச் ஸ்டார்கென் பர்க் என்பவர் கேட்டிருந்த கேள்விகளுக்கு தோழர் ஏங்கெல்ஸ் எழுதிய பதிலிலிருந்து எடுக்கப்பட்டது.]

---

# "பாம்புக்குத் தலையும் மீனுக்கு வாலும்"-வேண்டாம்

அண்மையில் திருச்சி மாவட்டம் பெரம்பலூர் தாலுகா லப்பைக்குடிகாட்டில் தமிழக முதலமைச்சர் பேசும் போது, கரும்பு விவசாயிகளுக்கு கரும்புக்கு நியாயமான விலை கிடைக்காமல் இருப்பதைப் பற்றியும்—வெளிமார்க்கெட் சர்க்கரை விலை ஏற்றத்தினால் மக்கள் தவியாய்த் தவிப்பது பற்றியும் கவலை தெரிவித்தார்.

ஆனால் அவர் அதோடு நிற்கவில்லை! மாறாக, லெவி சர்க்கரை விலையை உயர்த்தாததினால்தான்கரும்புவிவசாயிகளுக்கு கரும்புக்கு நியாயமான விலை கொடுக்கமுடியாமற் போகிறது என்றும் சொன்னார்.

அதற்கு மேலும் சென்று. லெவி சர்க்கரைக்கு குவிண்டாலுக்கு பீகார் மாநிலத்தில் 400 ரூபாய் என்றும் தமிழகத்தில் 151 ரூபாய் என்றும் நிர்ணயித்திருப்பதன் மூலம் மத்திய அரசு தமிழகத்துக்கு பாகுபாடு காட்டுவதாகவும், ஆகவே தமிழகத்திலும் லெவி சர்க்கரை விலையை உயர்த்த வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டுள்ளார்.

கரும்பு விவசாயிகளின் நிலை பற்றியும், சர்க்கரை உபயோகிப்போர் (பொது மக்கள்) தவிப்பு பற்றியும் அவர் கவலை தெரிவித்தது சரியே.

உருக்கு, சிமெண்ட், அலுமினியம் ஆகியவற்றின் விலைகளை தாறுமாறாக ஏற்றி நிர்ணயித்திருப்பதில் சுறுசுறுப்பு காட்டும் மத்திய அரசு கரும்பிற்கு நியாய விலை நிர்ணயிப்பதற்கு மட்டும் தயங்குவது ஏன்? காரணம் இல்லாமலா?

உருக்கு, சிமெண்ட், அலுமினியம் ஆகியவற்றின் விலைகள் உயர்த்தப்படுவதால் டாட்டா பிர்லா-டால்மியா போன்ற ஏகபோக முதலாளிகளின் கொள்ளை லாபம்பெருகிறது,

கரும்புவிலையை உயர்த்தினால் சர்க்கரை ஆலைபகாசுரர்களின் கொள்ளையைச் சிறிது —லேசாகத்தொடும். அவ்வளவுதான். அதற்காகத்தான் மத்திய அரசு முகம் சுளிக்கிறது.

ஆகவே, கரும்பு விவசாயிகளுக்காக தமிழக அரசு பரிவு காட்டவேண்டியது அவசியம்தான். நியாயமும் கூட! ஆனால் —

'லெவி சர்க்கரை விலையை தமிழகத்தில் உயர்த்தாமலிருப்பதினால்தான், சர்க்கரை ஆலை முதலாளிகளினால் கரும்பிற்கு நியாயமான விலை கொடுக்க முடியவில்லை என முதலமைச்சர் கூறுவது உண்மைக்குப் புறம்பானதாகும். முதலாளிகள் முன்வைக்கும் பொய்வாதமும் இதுதான். அதாவது வெளி மார்க்கெட்டில் 35 சதவீதம் சர்க்கரையை விற்கும் விலையில் கிடைக்கும் லாபம் அனைத்தும், லெவி விலைக்கு 65 சதவீதம் சர்க்கரையை விற்பதினால் ஏற்படும் நஷ்டத்தைச் சரிக்கட்டுவதற்கே சரியாகி விடுகிறது என்று முதலாளிகள் வாதிட்டனர். இப்படி இருக்கும் போது கரும்புக்கு அதிகவிலை எங்கிருந்து கொடுக்க முடியும் என்று கேட்டு வந்தனர்,

## சர்க்கரை ஆலை முதலாளிகளின் கூக்குரல்

ஆனால், முதலாளிகளின் இந்த வாதத்தை, அவர்களாலேயே கடந்த சில ஆண்டுகளாக வெளியிட்ட பாலன்ஸ் ஷீட்டு'களே பொய்ப்பித்து விட்டன.

பொள்ளாச்சி மகாலிங்கத்துக்கு சொந்தமான சக்தி சுகர்ஸ் ஆலையின் பாலன்ஸ் ஷீட் அடிப்படையில் அங்குள்ள முன்னேற்ற சங்கம் ஓர் பிரசுரம் வெளியிட்டுள்ளது, அதில்,

1971-ல் 55லட்சம் ரூபாயும்

1972ல் ஒருகோடியே 35 லட்ச ரூபாயும்,

1973ல் 75 இலட்சம் ரூபாயும்,

1974ல் ஒருகோடியே ஐந்து இலட்சம் ரூபாயும் லாபம் பெற்றுள்ளது.

லெவி விலைக்கு விற்றபிறகும் கிடைக்கும்லாபம் இது என்பது மறக்கலாகாது. ஆகவே வெளிமார்க்கெட் விலையில் மட்டுமல்ல. ஏற்கெனவே நிர்ணயிக்கப்பட்டுள்ள லெவி விலையிலும் கணிசமான லாபம் கிடைக்கிறது என்பது தெளிவாகிறது அல்லவா?

இதுதவிர, ஒவ்வொரு ஆலையிலும் உற்பத்தியான சர்க்கரையில் கணக்கில் காட்டப்படாமல் ஒதுக்கி வைத்து வெளிமார்க்கெட்டில் விற்கப்படுவதாக சொல்லப்படும் சர்க்கரையின் மூலம் கிடைக்கும் லாபத்தையும்சேர்த்தால் நிலைமை எப்படி இருக்கும்?

இந்நிலையில், லெவி சர்க்கரை விலையை உயர்த்தாமலேயே கரும்புக்கு நியாயமான-அதிகவிலை கொடுக்க சர்க்கரை ஆலை முதலாளிகளுக்குஇயலும் என்பது புலனாகிறது அல்லவா? ஆகவே, லெவி விலையை உயர்த்த வேண்டும் என்பதானது, வெறும் கூக்குரலேயாகும். ஆம், கரும்பிற்கு நியாயமான விலை கொடுக்க மறுத்து, விவசாயிகளை தாங்கள் ஈவிரக்கமின்றி சுரண்டுவதை மறைக்கவும் |சர்க்கரை உபயோகிக்கும் கோடிக்கணக்கானமக்களைஒட்டச் சுரண்டி —மேலும்மேலும் விலையை உயர்த்துவதன் |மூலம்—கொள்ளை லாபம்குவிக்கவும்—சர்க்கரை ஆலைமுதலாளிகள் இடும் கூக்குரலேயாகும் இது'

## மக்களின் வயிற்றிலடிப்பது

லெவி விலையை உயர்த்துவது என்பதானதுகூடும் பக்கார்டு மூலம் பொதுமக்கள்வாங்கும்சர்க்கரை விலையை உயர்த்துவதும், அதைத்தொடர்ந்து வெளிமார்க்கெட் சர்க்கரை விலையை மேலும் உயர்த்தி கோடிக்கணக்கான மக்களின் வயிற்றில் அடிப்பதும் ஆகும். இந்த உண்மை தெரிந்திருந்தும் முதலாளிகளின் 'தீனக்குரலை''க் கேட்ட மத்திய ஆட்சியாளர்களோ மனம் "இளகி'' பீகார் போன்ற மாநிலங்களில் லெவிவிலையை சமீபத்தில் செங்குத்தாக உயர்த்தி விட்டார்கள்,

சர்க்கரைத்தொழிலை அரசுடைமையாக்கமறுத்து வரும் ஓர் அரசு — அத்தொழிலை ஒரு கொள்ளை லாபக் கருவியாகஉபயோகப்படுத்துகிறமுதலாளிகளின் உடைமையிலேயே இருக்கவைத்துள்ள ஓர் அரசு—அவர்களின் மூலமாகவே உற்பத்தி |செய்விக்க விரும்பும் ஓர் அரசு—அந்த முதலாளிகளுக்குக் கொடுக்கும் விலைதான் இந்த லெவி விலை ஏற்றம் என்பது!

உண்மை நிலைமை இப்படியிருக்க — சர்க்கரை உபயோகிக்கும் மக்களின் தவிப்பைக் கண்டு கவலை தெரிவித்த முதலமைச்சர் முதலாளிகளின் உடைமையாக உள்ள மத்திய அரசே ஏற்று நடந்த வேண்டும் என்று கோரும் முதலமைச்சர் — பீகாரிலும் மற்ற மாநிலங்களிலும் லெவி விலையை மத்திய அரசு உயர்த்தி இருப்பதைக் கண்டித்திருக்க வேண்டுமல்லவா! லெவி விலை உயர்வை ரத்து செய்யும்படி கோரியிருக்க வேண்டுமல்லவா? அவர் கண்டிக்கவுமில்லை, கோரவுமில்லை. மாறாக—லெவி விலையை உயர்த்தக் கோருகிறார், இதனால் பலன் அடைவது தமிழக மக்களா?— இல்லையே. இங்குள்ள கோத்தாரியும்—பாரி முதலாளியும்—பொள்ளாச்சி மகாலிங்கமும்—மருதைப் பிள்ளையும்—தியாகராஜமுதலியாரும் தானே. இவ்வாறு கோரியிருப்பது பெரும் முரண்பாடல்லவா?

ஒரு புறம்— சர்க்கரைத் தொழிலை, தனிப்பட்ட முதலாளிகளிடமிருந்து எடுத்துக் கொள்ளவேண்டும் என்று மத்திய அரசிடம் கோருவது.

அதே மூச்சில் மறுபுறம்—சர்க்கரை ஆலை முதலாளிகளுக்கு வழங்கப்பட்டுள்ள வாய்ப்பை மேலும் விரிவு படுத்த வேண்டும் என்று அதே மத்திய அரசிடம் கோருவது. இதை என்னென்று கூறுவது?

## தமிழகத்தில் மட்டும் விதிவிலக்கு

சர்க்கரைத்தொழிலில் உள்ள ஓர் உண்மையான பாகு பாட்டை—பாரபட்சத்தை எதிர்த்து முறியடிக்க தமிழக அரசுக்கு அண்மையில் ஓர் சரியான சந்தர்ப்பம் கிடைத்தது. அதாவது, சர்க்கரைத் தொழிலில், கரும்பு அறவை இல்லாத காலத்திலும்கூட நிரந்தரத் தொழிலாளிகள்—இந்திய நாட்டில் எங்குமே—'லே-ஆப் செய்யப் படுவதில்லை. ஆனால் தமிழகம் மட்டும் அதற்கு விதிவிலக்கு! ஆம்.

பீகார் சர்க்கரை ஆலை அதிபர்களுடன் ஒப்பீடு செய்து, தங்களுக்கு எதிரான "பாரபட்ச''த்தை எதிர்க்கின்ற தமிழக சர்க்கரை ஆலை அதிபர்கள், தங்களது ஆலைகளில் பணியாற்றும் நிரந்தரத் தொழிலாளர்களை 'லே, ஆப்' செய்கிறார்கள். இதன் மூலம், அனைத்திந்திய தொழிலாளர்களிடமிருந்து தமிழகத்தொழிலாளர்களைப் பாகுபாடுபடுத்தினர், இந்த 'பாகுபாட்டை' எதிர்க்கும் அதிபர்கள்.

'பாகுபாடு' செய்யப்படுவதை எதிர்ப்பதாகக் கூறும் தமிழக ஆட்சியாளர்கள் தொழிலாளர்களுக்கு எதிராக முதலாளிகள் மேற்கொண்ட இந்த பாகுபாட்டைத் தடுத்தார்களா தடுக்க வாய்ப்பும் அதிகாரமும் இருந்தும்! இல்லை, அதற்கு மாறாக—

மாத ஊதியத்தில் 30 சத வீதம் முதல் 50 சத வீதம் வரை ஊதியம் மட்டுமே கொடுத்து ஓராண்டு காலத்திற்கு மேல் அரைப்பட்டினிக்கு தொழிலாளர்களையும் அவர் தம் குடும்பத்தினரையும் ஆளாக்கும் இந்த கொடுமை மிக்க பாகுபாட்டைத் திணித்த முதலாளிகளை கண்டிக்கவோ, கட்டுப்படுத்தவோ. முன்வரவில்லை. தமிழக அரசு. அது தற்போது எடுத்துள்ள நிலை கரும்பு விவசாயிகளின் அவலநிலையையும் பொதுமக்களின் தவிப்பையும் சுட்டிக்காட்டி, சர்க்கரை ஆலை பகாசுரர்களுக்கு துணைநிற்பதில் கொண்டு சேர்த்திருக்கிறது.

இது முறையுமன்று! சரியுமன்று! நியாயமுமன்று!

எனவே—தமிழக அரசு இந்தப்பாதையைக் கைவிட்டு—

## தமிழக அரசு செய்ய வேண்டியதென்ன?

லெவி விலை உயர்வை ரத்துச்செய்தல்.

கரும்பு விவசாயிகளுக் குநியாயமான விலை நிர்ணயித்தல்

—லே-ஆப் செய்யப்பட்ட நிரந்தரத் தொழிலாளர்களை மீண்டும் வேலையில் அமர்த்துதல்

— பருவகால [சீசனல்]த் தொழிலாளர்களுக்கு முழு நஷ்டஈடு வழங்குதல்—ஆகிய இந்த நியாயமான கோரிக்கைகள் சம்பந்தமாக தமிழக அரசு சரியான நிலை எடுக்க வேண்டும். தொழிலாளர்களின் நலன் காக்க முன்வர வேண்டும்.

இக்கோரிக்கைகளை நடைமுறைக்குக் கொண்டு வர தமிழகத்தில் உள்ள சர்க்கரைத் தொழிலை உடனே அரசுடைமையாக்க முன்வர வேண்டும். இதைவிடுத்து,

"பாம்புக்குத் தலையும், மீனுக்கு வாலும்'' என்ற நிலை வேண்டாம்.

—நந்தன்

---

# திருவனந்தபுரத்திலும் தீரவில்லை!

திருவனந்தபுரம், டிச.13—

கேரள அமைச்சரவை விஸ்தரிப்பு சம்பந்தமாக திருவனந்தபுரத்தில் பேச்சுவார்த்தைகள் நடத்திதளர்ந்து போன ஆளும் கூட்டணித்தலைவர்கள், இறுதியில்திருவனந்தபுரத்தை விட்டுச் சென்றார்கள்.

ஆளும்கூட்டணியில் உள்ள முஸ்லிம்லீக் தலைவர் சி. எச். முகமது கோயாவும், கேரள இந்திரா காங்கிரஸ் தலைவர் ஏ. கே. அந்தோணியும், கடந்த 10-ந்தேதியன்று திருவனந்தபுரத்தைவிட்டு சென்றார்கள். ஆளும் கூட்டணியின் மற்ற கட்சித்தலைவர்கள் மறுநாள் சென்றனர்.

ஆளும் கூட்டணி அமைச்சரவை விஸ்தரிப்பு சம்பந்தமாக அண்மையில் டெல்லியில் நடந்த விவாதத்தின் தொடர்ச்சி என்ற முறையில் திருவனந்தபுரத்தில் கடந்த 7-ந் தேதியன்றும் 8-ந் தேதியன்றும் விவாதம் நடந்தது. ஆனால் ஒரு முடிவும் ஏற்படாமல் கூட்டம் கலைந்தது.

காரியம் மீண்டும் டெல்லிக்கு கொண்டுபோகப் படலாம். ஆனால், அங்கும் உடனடியாக மற்றொரு விவாதத்தை தொடங்க சிரமங்கள் ஏற்படும். என்ன சிரமங்களென்றால், அகில இந்திய காங்கிரஸ்மாநாடு சம்பந்தமான தயாரிப்பு வேலைகளில் காங்கிரஸ் தலைவர்கள் முனைப்பாக இருக்கிறார்கள் என்பது ஒன்று. முஸ்லீம் லீக்தலைவர்களுக்கு பக்ரீத்பண்டிகை என்பது மற்றொன்று. அதனால் அவர்கள் தற்போது டெல்லிக்குப் போக மாட்டார்கள்.

வலது கம்யூனிஸ்டுகட்சியும், புரட்சி சோசலிஸ்ட் கட்சியும் இடைவிடாது கமிட்டிக்கூட்டங்கள் நடத்திக் கொண்டிருக்கின்றன. அக்கூட்டங்கள்உடனடியாக ஒன்று முடிந்தபாடில்லை.

எப்பாடுபட்டேனும் விவாதத்தை மீண்டும் டெல்லிக் கொண்டுசெல்ல முயன்றாலும் கூட, ஜனவரி 15 ம் தேதிக்கு முன்பு அங்குள்ள காங்கிரஸ்உயர்மட்டத்தலைவர்களிடமிருந்து ஆளும்கூட்டணியினருக்கு [illegible] கிடைக்குமென்பது மிகவும் சிரமம் என் [illegible] கிறது.